# சமூக, ஒழுக்கக் கல்வி

மேல்நிலை முதலாம் ஆண்டு



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# சமூக, ஒழுக்கக் கல்வி

மேல் நிலை - முதலாம் ஆண்டு



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்
சென்னை

# பொருளடக்கம்


பக்கம்

| | | |
|---|---|---|
| | முன்னுரை ... | ... 1 |
| 1. | சூழ்நிலைக்கேற்ப நம் பிரதிவினை | ... 19 |
| 2. | சூழ்நிலைக்குப் பொருத்தமுடைய சிந்தனைசக்தியின் இடம் ... | ... 28 |
| 3. | மனத்திண்மையை வளர்த்தல் | ... 32 |
| 4. | அண்டை அயலாருடன் நமது உறவு | ... 41 |
| 5. | சமூக அமைப்புகளும் அவற்றின் கொள்கைகளும் மரபுகளும் ... | ... 45 |
| 6. | இந்தியாவின் கடந்தகால - இன்றையநிலை | ... 56 |
| 7. | குடியுரிமை பற்றிய கருத்து | ... 64 |
| 8. | நற்குடிமக்களை உருவாக்குவதில் சமுதாயத்தின் பங்கு | ... 76 |
| | ஆய்வுக்குரிய தலைப்புகள் ... | ... 78 |

# சமூக, ஒழுக்கக்கல்வி

## முன்னுரை

மாணவரை ஒருமையுடன் நற்குணமும் நல்லொழுக்கமும் உடையவராக வளர்ப்பதே சமூக, மற்றும் ஒழுக்கக்கல்வியின் தலையாய குறிக்கோளாகும். இக்குறிக்கோளை அடைவதற்கு மாணவர் தமது இயல்பான பகுத்தறியும் பண்பை வளர்த்துக் கொண்டு சரியான பாதையில் நடத்திச் செல்லப்பட வேண்டும். பல வேறுபட்ட கலாசாரங்கள் நிறைந்ததொரு நாட்டில் ஒருவன் சகிப்புத் தன்மையையும் பிறர் கருத்துக்கு மதிப்பளிக்கும் அக்கறை யையும் வளர்த்துக்கொள்வது இன்றியமையாதது. எனவே, ஒழுக்கக்கல்வி என்பது வெறும் ஏட்டுச்சுரைக்காயோ, அல்லது செய்திகளைத் திணிக்கும் கருவியோ அன்று. மாறாக, நன்னடத் தையையும் ஒருவனது முழுமையான நல்லியல்புகளையும் ஊக்குவித்து, சமூக சூழ்நிலைகளுக்கு ஏற்பக் கற்பவரின் பாங்கான விளைவுகளை அமைத்துத் தருதலே ஆகும். இவை மாணவனை இடையூறுகளையும், துன்பங்களையும் தாங்கிக் கொள்ளும் கூரிய அறிவுடையவனாக ஆக்குகின்றன. மாணவன் மனித சமுதாயத்தின் பிரச்னைகளை மிகுந்த பரிவுடனும் தெளிந்த அறிவுடனும் ஆராய் வதற்குப் பயிற்சி அளிக்கப்பட வேண்டும். சுருங்கக் கூறின். இப் பயிற்சியின் மற்றொரு குறிக்கோளாவது, மாணவனைச் சமூக வாழ்விற்குப் பொருத்தமானவனாக ஆக்குதலே யாகும்.

### *ஒழுக்கமுடைமையின் வளர்ச்சி பற்றிய வரலாறு*

ஒழுக்கமுடைமை வளர்ச்சியில் பொதுவாக மூன்று நிலைகள் உள்ளன.

**(அ) உள்ளுணர்வின் அளவு :** இது ஒரு செயலைச் செய்பவர் களுக்குச் சரி என்று படக்கூடிய நடத்தை. அவருடைய அடிப் படைத் தேவைகளை உள்ளுணர்வுகளால் முடிவு செய்யும் நடத்தை

**(ஆ) பழக்கங்களின் படிநிலை:** ஒருவன் எக்குழுவைச்சார்ந்திருக்கிருனே, அக்குழுவினரின் பழக்கங்களின்படி சரியெனப்பட்ட செயல்களைச் செய்தல்.

**(இ) மனச்சான்றின் அளவு:** எது சரி? எது தவறு? என ஒருவரது தனிப்பட்ட தீர்விஞல் ஆய்ந்து சரியானதை ஏற்றுக் கொள்ளுதல்.

## *(அ) உள்ளுணர்வின் அளவு*

மனிதனின் மிகத் தொடக்க நிலையில் மனிதனைப்பற்றி வெளிப்படையாக இரு வேறுபட்ட தோற்றங்கள் தரப்படுகின்றன. இது குறித்து ஃபிரெஞ்சுத் தத்துவ அறிஞர் ரூஸோ கூறுவது: 'மனிதனின் தொடக்க வாழ்வு, சமூகத்தின் பழக்க வழக்கங்களாலும் சட்டதிட்ட அமைப்புகளாலும் ஏற்பட்ட செயற்கையான தடைகளிலிருந்தும் அடக்கு முறைகளிலிருந்தும் விடுபட்டு உண்மையாகவே நன்மையும் சுதந்தரமும் அமைதியும் ஒற்றுமையுணர்வும் நல்லொழுக்கமும் மகிழ்ச்சியும் உடையதாகும்.' இதற்கு மாருக ஆங்கிலேயத் தத்துவ அறிஞர் ஹோப்ஸ் கூறுவது: 'தனக்கு மகிழ்ச்சியைத்தந்து, இன்புறச் செய்யும் பாவைகளையே மனிதன் இயல்பாகத் தேடுகிருன்.'

நாம் எதை ஆரம்ப நிலையாகக் கருதுகிருேமோ, அந்தக் குழு உணர்வின் அடக்குமுறை இயற்கைக்கு அப்பாற்பட்ட சக்தியால் ஏற்படும் தண்டனை என்னும் அச்சம் ஏற்படுவதால் விரிவான மரபுக்குரிய நீதிகளைச் சமுதாயம் எப்போதும் உருவாக்கிக் காத்து வந்திருக்கிறது.

இவ்வுணர்வின் அளவில் விலங்குகளின் நடத்தை சரியா? தவரு? என்பதைக் கூற முடியாது. அவை ஒழுக்கமுடையனவா? அல்லவா? என்பதையும் கூறமுடியாது. தெளிவற்ற நிலையில் விலங்குகள், உள்ளுணர்வின் திடீர் இயக்கத்தைச் செயலாற்றுவது பொருத்தமானதே. இதேபோல் மனித இனத்தின் திடீர் இயக்கங்கள் எப்படி இருந்தபோதிலும் காணப்படுகின்றன. ஒருவருடைய உணர்ச்சிகளுக்கு எதிராக ஒழுக்கத்திற்கு ஒவ்வாத கருத்துக்களின் தோற்றம் கோபத்திற்கு வழி செய்கிறது. நாகரிக முதிர்ச்சியின் முன்னிலையில் உள்ள ஆதி மனிதன் தனக்குப் பிடிக்காதவற்றைத் தீயவை என்று கருதியது பொருத்தமானதே. ஆதிமனிதன் சமுதாய வளர்ச்சி சில காலங்களில் ஒரு திசை வளர்ச்சியாகவே இருந்திருக்க வேண்டும்.

(1) இவ்வளர்ச்சி பிகுதியான கூட்டுறவையும் சமுதாய நோக்கையும் உண்டாக்கியது. தனிமனிதன் சிறிதளவே தன்னை விரோதிகளிடமிருந்து காக்கவும தன் தேவைகளை நிறைவு செய்து கொள்ளவும் முடியும். கூடி வாழும்பண்பு, பாலுணர்வு, முன்மாதிரியைப் பின்பற்றி நடத்தல், குறிப்புணரும் திறன், பரிவு போன்ற உணர்ச்சிகள் அவன் மற்ற மனிதர்களுடன் கலந்து வாழ்ந்ததையும் அவர்களுடன் அவனுக்கிருந்த தொடர்பை யும் குறிப்பால் உணர்த்துகின்றன. அவனுடைய சமூக உணர்வு, மன அமைதிக்கேற்ற தேவைகள் ஆகிய இரண்டும் அவன் தோழமை கொண்ட மக்களுடன் தற்காலிகமாகவோ, நிரந்தர மாகவோ தொடர்பு கொண்டிருந்தான் என்பதைத் தெளிவுபடுத்து கின்றன. இத்தொடர்பு பல் வேறுவிதமான செயல்களைச் செய்யும் பல்வேறு மக்களின் தொழில் அடிப்படையில் அமைந்த இனங்களை உண்டாக்குகிறது.

(2) மனிதன் தன் தேவைகளை அதிக அளவு நிறைவு செய்வதற்கு அதிக அறிவைப் பயன்படுத்தக்கூடிய நிலையினுல் செயல்கள் மேலும் மேலும் அறிவுக்குப் பொருத்தமுடையவை யாகின்றன. அவன் தன் புத்திக் கூர்மையினுல்தான் உற்பத்தி செய்யும் பொருள்களுக்குத் துணையாகக் கருவிகளைக் கண்டுபிடிப் பதன்மூலம் இது புலப்படுகிறது. தேர்வில் தேர்ச்சி பெறுதல், பணம் சம்பாதித்தல் போன்ற குறிக்கோள்களை நாம் கொண்டிருப் பதைப்போல நம்வாழ்வின் நல்வழிகளையும் தேர்ந்தெடுக்கிரேம். இதற்கு அறிவு சிறப்பாகப் பயன்படுகிறது. எனினும், இந்தச் செயல்முறைகளின் முடிவைப்பற்றி நாம் இன்னும் தெளிவற்ற நிலையிலேயே இருக்கிரேம்.

## (ஆ) பழக்கங்களின் படிநிலை

ஒரு மனிதன் எந்தச் சமுதாயத்தைச் சார்ந்திருக்கிருனே, அச்சமுதாயத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட திட்டங்களையோ, நடைமுறை வழக்கங்களையோ கைக்கொள்வதால் அவன் அவற்றைச் சரியானவையாகக் கருதுகிருன். 'நன்னடத்தை' (morality) என்னும் சொல் செய்கை அல்லது வழக்கம் என்னும் பொருளுடைய 'மோர்ஸ்' என்னும் இலத்தீன் சொல்லிலிருந்து தோன்றியது; 'ஒழுக்கவியல்' என்னும் பெயர் செயல் அல்லது பழக்கம் என்னும் கிரேக்கச் சொல்லின் துணைப் பொருளாகத் தோன்றியது என்று அறிஞர்கள் கூறுகிருர்கள். மரபு வழக்கான நன்னடத்தை, கூடி வாழும் பண்பு, பரிவு உணர்ச்சி, பார்த்துப்

பழகும் தன்மை, குறிப்புணரும் திறன் எனப்படும் உள்ளுணர்வின் அடிப்படையில் பிறந்தது என்பதில் சிறிது ஐயப்பாடு உண்டு. எப்படி இருப்பினும், கூடி வாழும் பண்பினுல் ஏற்படும் உள்ளுணர்விற்கும் மற்ற உணர்வுகளிலிருந்து ஏற்படும் தூண்டுதலுக்கும் அதிக வேறுபாடு உண்டு. தோன்றி மறையக்கூடிய உள்ளுணர்வுகள் திடீரென்று மறைந்துவிடுகின்றன. இவ்வாருக ஒரு குழுவின் நன்னடத்தை பற்றிய கருத்துக்கள் எந்த மனிதனுலும் சந்தேகிக்க முடியாதபடி ஒரு தனிமனிதனின் தெளிவான கொள்கைகள் ஆகின்றன. பழக்கங்களின் படிநிலை உள்ளுணர்வின் படிநிலையிலிருந்து வேறுபடுத்த முடியாத காரணத்தால் இந்நிலை உருவாகிறது.

சமுதாயத்திற்கு மிகவும் சிறப்பான இடம் கொடுப்பதே மரபு வழக்கின் குறிப்பிடத்தக்க அம்சமாகும். இந்நிலையில் ஒரு நாடு சமுதாயத்தில் அங்கத்தினர்களுக்குப் பாதுகாப்புத் தரும் ஓர் அமைப்பு ஒழுங்கான அரசின் நெறியாக மட்டுமே இருப்பதில்லை. பொதுவாக, சமுதாயத்தின் தேவைகளை நிறைவு செய்தல், சொத்துக்களைப் பொதுவாக நிர்வகித்தல், வேலைகளில் பிரிவுகளை அமைத்தல் போன்ற பொருளாதார நெறியைச் சார்ந்ததாகவும் உள்ளது. சமுதாயத்தில் ஒருவர் இழைக்கும் தவறு காரணமாக மற்ற அங்கத்தினர்களால் ஒரு விதத்தில் இது பழிதுடைப்பதற்குரிய நல்லொழுக்க முறையாகவும் அமைகிறது; மரபுகளைப் பின்பற்றும் தன்மைகளுள் எவை தன்னுறுதியையும் தன்னலத்தையும் கொண்டிருக்கின்றனவோ அவற்றைவிடச் சமுதாய நலனையும் சமுதாய உணர்வையும் ஏற்படுத்துவதற்கு முயலும் தன்மைகளைத் தனி மனிதனிடம் வெளிக்கொணர முற்படுகிறது. மேலும், முன்னர்க் கூறப்பட்டவை நல்லொழுக்க வளர்ச்சியைக் கட்டாயமாக வழங்கக் கூடியவை. தனிமனிதன் எந்தக் குழுவைச் சார்ந்திருக்கிருனே, அக் குழுவினுல் ஏற்படுத்தப்பட்ட வன்முறைச்செல்வாக்கின் கீழ் அவனுல் தன்னுடைய முறையான பழக்கங்களை அமைத்துக் கொள்ள முடிகிறது.

## (இ) மனச்சான்றின் அளவு

இந் நிலையில் நல்லொழுக்க வலிமை ஒவ்வொருவருடைய அகத்தே உள்ளது; அஃது ஒருவரை வழிநடத்தும் மனக்குரலாக அமைகிறது. செய்வதற்குத் தெளிவாகவும் சரியாகவும் உள்ள செயல்களைக் காட்டித் தருவது மனச்சான்றுக்குக் கட்டுப்பட்ட நிலையாகும். பழக்கங்களின் படிநிலையிலிருந்து ஏற்பட்ட முன்னேற்றம் மூன்று வழிகளில் நிகழ்கிறது. குறைவான அல்லது அதிகமான அமைதிக்குப் பின் நன்னடத்தையின் படிநிலை தனிமனிதனுல் சுறுசுறுப்பான நிலை

யில் தேர்ந்தெடுக்கப்படுகிறது. அஃது ஒரு குழுவில் உள்ள அவன் வாழ்க்கையில் தவிர்க்க முடியாத பகுதியாக அமைந்துள்ளது என்பதை முன்போல் இப்போது யாரும் ஏற்றுக்கொள்வதில்லை. நன்னடத்தையில் ஒரு புதிய தனிப்பட்ட அக்கறை இருக்கிறது. முன்னேறிய சமுதாயத்தில் பல்வேறு குழுக்களிலும் அமைப்புகளிலும் மனித நலனின் பல்வேறு அம்சங்கள் முக்கியமான பொருளாக இருக்கும்போது நல்லொழுக்கம் தனிமனிதனின் சமூகப் படிநிலையாக முற்படுகிறது. நல்லொழுக்கம் தொடர்பானவற்றுள் தன்னுடைய தீர்வைக் கொண்டு தன்னைத் தானே ஒரு மனிதன் உறுதியாக்கிக் கொள்ள முடிகிறது. மேலும், எவன் அவ்வாறு செய்கின்றானோ அவன் குறைந்தது அந்நேரத்தில் பழக்கங்களின் அளவிலிருந்து மனச்சான்றின் அளவிற்குச் செல்கிறான்.

## *தனிமனிதனின் நல்லொழுக்க வளர்ச்சிக்கு உட்பட்ட முக்கியமான அம்சங்கள்*

### 1. *சூழ்நிலையின் காரணக்கூறுகள்*

**குடும்பம் :** குடும்ப பாசங்களின் ஆதிக்கம் இன்பத்துக்கு வழி செய்வதில் சிறப்பானது என்று தற்கால ஒழுக்கநெறிப் போதனையாளர்கள் கருதுகின்றார்கள். குடும்பம் என்பது இயற்கையான அன்பினை அடிப்படையாகக் கொண்டது. உதவியற்ற தன்மையில் உள்ள குழந்தைப் பருவத்திற்குத் தேவையான பாதுகாப்பும் ஆதரவும் தருவதோடு உயர்ந்த அன்பும் நேசமும் போதிய அளவு சமுதாயப் படிநிலையில் இருக்கச் செய்வதே இதனுடைய முதன்மைக் குறிக்கோளாகும். பொதுவாக முன்னர்க் கூறப்பட்ட குறிக்கோள் பெற்றோர் அன்பின் காரணமாக நன்கு பெறப்படுகிறது என்று கருதப்படுகிறது. எனவே, இளம்பிராயத்திலேயே குழந்தைகளைப் பொருத்தமற்ற வேலைகளில் ஈடுபடுத்தாமல் பொருத்தமான கல்வியை அவர்களுக்குப் புகட்டுவது இன்றியமையாதது.

**சமூகம் :** பகுத்தறிவுத் தத்துவங்களின்படி குறிப்பிட்ட பழக்கங்களுக்கு அடிமையாகித் தேர்ந்தெடுக்கப்பட்ட செயல்களைப் பற்றியது நன்னடத்தையாகும். தினசரி நிகழ்ச்சிகளைக் கட்டுப்படுத்தும் அறிவார்ந்த தத்துவங்களும் உண்மைகளும் அறிவாற்றலுக்குரிய குணங்களை மேலும் உயரச்செய்கின்றன. ஆனால், ஒரு சிலரிடமே ஆழ்ந்த சிந்தனை செய்யக்கூடிய தன்மை அடங்கியுள்ள நேரத்தில் நடைமுறைக் குணங்கள் சாதாரண

மனிதர்களுடைய ஆளுகைக்கு உட்பட்டுள்ளன. நடைமுறை முடிவுகளின்படி தினசரிப் பழக்கங்களின் படிநிலையிலும் மனிதன் பெரும்பகுதி வாழ்ந்திருக்கிறான். நன்னடத்தைக்குத் தேவையான நற்பழக்கங்கள் தனிப்பட்ட பொருளாகக் கட்டாயமாக இருக்க முடியாது. ஆனால், ஒரு நல்ல சமுதாயச் சட்ட அமைப்பில் மிக நன்றாக அமையலாம்.

**கலாசாரம்:** கலாசாரம் என்பது சமுதாயத்தின் உறுப்பினன் என்ற முறையில் ஒரு மனிதன் பெறக் கூடியனவும் வளர்த்துக் கொள்ளக் கூடியனவுமான அறிவு, நம்பிக்கை, கலை, நன்னடத்தை, சட்டம், பழக்கவழக்கங்கள், பிறகலைகள் ஆகியவை அடங்கிய ஒரு கூட்டுத் தொகுதியே ஆகும். உலகியல் பொருள்கள் அல்லாத மொழி, இசை, கவிதை, ஆக்க வளமுடைய எண்ணங்கள் போன்றவைகளால் ஆக்கப்பட்டது கலாசாரம். ஆனால், உலகியல் பொருள்களான தொலைபேசி, ஊர்திகள், எந்திரசாதனங்கள் போன்றவைகளையும் தன்னுள் அடக்கியது நாகரிகம். கலாசாரம் பரப்பப்படுகிறது; அறியப்படுகிறது; பங்கிடப்படுகிறது. பண்படாத அல்லது பண்பட்ட ஒவ்வொரு கலாசாரமும் எப்படி யாயினும் அதற்குரிய மக்களின் அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்வதற் காகவே உள்ளது. இது ஒத்த தத்துவங்களின் செயல்முறை ஆதிக்கத்தால் பாதிக்கப்படாது. வெளிப்புற முழுமையான தலைமையில் எந்தக் கலாசாரமும் முன்னேற முடியாது. ஒவ்வொரு சமுதாயத்திலும் உணவைப் பெறுதற்கும் உண்டு மகிழ்தற்கும் ஆடலுக்கும் இறைவழிபாட்டிற்கும் பயன்களைப் பரிமாறிக் கொள்ளும் தன்மைக்கும் இன்னபிற செயல்களுக்கும் சிறப்பான வழிகள் உள்ளன. எந்த வழியில் அச்சமுதாயத்தின் உறுப்பினர் ஒருவருக்கொருவர் செயல்புரிகின்றார்களோ, எந்த அங்கத்தை வகிக்கின்றார்களோ, எந்தக் கட்டளைச் சட்டங்களுக்கு உட் பட்டிருக்கிறார்களோ, அவையே கலாசார அமைப்பை உருவாக்கு கின்றன.

அதனதன் வழியில் செய்யப்படும் செயல் மற்றெல்லா வற்றையும்விட உயர்ந்ததாக இருக்கின்றது என்ற எண்ணத்தை உலகில் உள்ள ஒவ்வொரு கலாசாரமும் உண்டாக்குகிறது. பிற கலாசாரங்களைத் தாழ்வாகக் கருதக் கூடிய மனப்பாங்கு 'எத்தனோ சென்ட்ரிஸம்' என்று அழைக்கப்படுகிறது. இஃது ஒரு தடையாக அமைந்துள்ளது. ஏனெனில், இது பல நாடுகளைச் சேர்ந்த ஒழுங்கு திடீரெனத் தோன்றுவதற்குத் தேவையான ஒன்றுபடும் தன்மை யையும் முழு ஈடுபாட்டையும் கொடுப்பதில்லை.

**சமயம் :** மனிதனுடைய பேரார்வம், ஆவல், செயல்கள் ஆகியவை தத்துவம், விஞ்ஞானம், கலை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு வெளியிடப்படுகின்றன பண்பட்ட சமயம் என்பது இப்பிரபஞ்சத்தையும் மனித வாழ்வையும் பற்றிய தத்துவங்களின் அடிப்படையிலோ, குறிப்பிட்ட சில நம்பிக்கைகளின் அடிப்படையிலோ அமைகிறது. எதைச் சார்புடையதாக ஒருவன் கருதுகிருனே அதனுடைய விளைவைக் கொடுப்பது சமயம். எது உணர்வில் உயர்ந்ததாக இருக்கிறதோ, அது இயற்கையில் ஆழ்ந்ததாக இருக்கிறது என்னும் நம்பிக்கையில் வாழும் வாழ்வு சமயமாகும். இறை வழிபாட்டையும் பக்தியையும் குறிப்பாகச் சுட்டுவதே சமயமாகும். சமயத்தின் அறிவாற்றலைவிட வழிபாடே மையக்கருவாகிறது. மனிதன் தனக்கும் தன் உலகத்துக்கும் இடையே ஓர் இணக்கத்தையோ பொருத்தத்தையோ பெற விழைகிருன். இன்னும் மெய்ம்மையில் பற்றுறுதித் தொடர்பு உண்டாக்க வேண்டும். தத்துவம்,பண்பட்ட அறிவு மிகுந்த கருத்துக்களின் அடிப்படையில் சமயச்சார்பான உள்ளத்தின் உயர்வை உருவாக்க உதவுகிறது. ஒரு வருடைய நம்பிக்கைகள் விருப்பான கருத்துக்களையும் நைந்து போன குறுகிய போக்கையும் சாராத வரையில் சமயக் கருத்துக்களுக்கும் நம்பிக்கைகளுக்கும் தத்துவம் பக்கபலமாக இருக்கலாம். கடவுள், முக்தி, நேர்மையான நடத்தை, ஆழ்ந்த வழிபாடு, மேற்கொண்ட பொறுப்பு, இணக்கம், பொருத்திசைவு ஆகியவற்றில் சமயம் சிறந்த ஈடுபாடு கொண்டுள்ளது.

## 2. *தனிப்பட்ட காரணக்கூறுகள்*

**பழக்கங்களை உண்டாக்குதல் :** ஓர் ஒலியை உண்டாக்குவதற்கு நாவில் உமிழ்நீரைச் சுரக்க வைத்தல் போன்று ஒரு புறத் தூண்டுதலுக்கு ஒரு பிரதி வினையை உண்டு பண்ணும் தன்மையே பழக்கம் ஆகும். எல்லாச் செயல்களும் சரிசமமாக இருப்பதால் ஒரே சீரான-முழுமையான-உறுதிப்படுத்தப்பட்ட பயிற்சிகளால் பழக்கத்தின் வலிமை ஒரே சீராக உயர்த்தப்படுகிறது. ஆனல், உயிர்ப்பொருள்களின் இயக்க முறையைப் பழக்கங்களால் மட்டுமே தீர்மானிக்க முடியாது. எவை தடங்கலின்றி ஏற்கப்படுமோ அவற்றை நற்பழக்கங்களாக்கி உற்சாகப்படுத்த வேண்டும். நம் பழக்கங்களில் பல செயலிழந்திருக்கின்றன. நாம் நடக்கலாம்; ஊர்தியை இயக்கலாம்; சீழ்க்கையொலி எழுப்பலாம். ஆனல், இவற்றுள் எதையுமே உண்மையில் செய்யவில்லை. எப்படியோ நம் பழக்கம் மட்டும் தூண்டப்படுகிறது. நம் பழக்கங்களை (அ) பழக்கங்களின் போட்டிப் போராட்டம், (ஆ) பழக்கங்களின்

தொகுதி என இரண்டாகப் பிரிக்கலாம். எதிர்பார்க்கக் கூடிய இரு விளைவுகளில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுக்கும்போது போட்டிப் போராட்டம் ஏற்படுகிறது.

(அ) பழக்கங்களின் போட்டிப் போராட்டம்: இப்போட்டிப் போராட்டத்தின் தத்துவம் ஒவ்வொரு தூண்டுதலுக்கும் பல பிரதிவினைகளுடன் தொடர்புடையது என்பதைக் காட்டுகிறது. இவற்றில் காட்டப்பட்டவைகளில் சில மற்றவைகளைவிட வலிமையுடையனவாக உள்ளன. தூண்டுதலுக்குத் தொடர்புடைய பிரதிவினைகள் வரிசையாக ஒழுங்குபடுத்தப்பட்டுள்ளன நம் முறையில் வேறுபடுத்தி அறியும் திறனும் தேர்ந்தெடுக்கும் தன்மையை உண்டாக்குவதும் பழக்கங்களின் போட்டிப் போராட்டம். இதன் விளைவால் இறுதியில் சரியான பாதையை அடைய முடிகிறது. எனவே, எதிர்மறை யல்லாத மறுமொழி தேர்ந்த அறிவு எனப் பொருள்படுகிறது.

**(ஆ) பழக்கங்களின் தொகுதி :** இது பழக்கங்களின் இடையறுத் தொடர் வரிசையை முழுமையாக்கக் கூடிய நேரான வழியினைப் புரிந்து கொள்ள உதவுகிறது. மேலும், கண்ணுக்குப் புலனாகும் சரி நேர் வழிகளால் மட்டுமின்றி, அறிவினால் உணரக் கூடியவற்றாலும் அடைய முடிகிறது. உதாரணமாக 'டென்னிஸ்' விளையாட்டைப் பயிலும்போது ஆரம்ப நிலைகளில் பந்து மட்டையில் வீச்செல்லை முதன்மையாகப் பார்வையாற்றலாலும் இடப்பண்புக்குரிய சரிநேர் வழியாலும் முடிவு செய்யப்படுகிறது. மேலும், இவ் விளையாட்டை விளையாடுபவர் பந்துமட்டையை வீசுவதால் பந்து நகர்வதையும் காண்கிறார்; பின்வரும் நிலைகளில் அந்த அசைவின் உணர்வை அறிவார்ந்த முறைகளில் அறிய முற்படுகிறார். ஆரம்பப் பயிற்சிகள் அனைத்திலும் கண்ணால் பார்த்தலும் இடப்பண்புக்குரிய சரியான வழியில் உணர்தலும் சிறப்பான இடத்தைப் பெறுகின்றன. பின்னர் இவ்விளையாட்டில் தெளிவான மிக்க அறிவு உண்டாகிறது. இவ் வாறு பெறப்பட்ட இயக்கு தசைகளின் ஆற்றல் ஒத்த தரமுடைய உடல் அசைவுகளை உண்டாக்குகிறது. மேலும், அது தேர்ச்சி மிக்க செயற்கரிய செயலுக்கு வழிகாட்டுகிறது.

**குணநலன் :** நல்லொழுக்கமே குணநலனாகும் என்று கூறலாம். ஒவ்வொரு குணநலனும் அஃது எப்பொருளைச் சார்ந்திருக்கிறதோ, அப்பொருளின் தன்மையை வெளிப்படுத்துகிறது; அல்லது அப் பொருளின் வேலையை நல்ல முறையில் செயல்படுத்துகிறது. ஏனெனில், கண்ணின் சிறப்பினாலேயே நாம் நன்கு பார்க்கிறோம். எனவே, மனிதனின் நல்லியல்பு அவனை நல்லவனாக்கி, அவனது செயலைச்

சிறப்படையச் செய்கிறது. குணநலத்தின் மொத்த வளர்ச்சியைப் பெற வேண்டுமானால் மற்றவர்களுடைய கூட்டுறவினால் ஒரு முக்கியமான முடிவினை நோக்கி, தீவிரமாகச் செயல்படுதல் வேண்டும். அத்தகைய பொருத்தமான முறை பல மனிதருக்குப் பல வழிகளில் வருகிறது. சிலர் அறிவியலில் ஈடுபடுவதன் மூலம் இதனைப் பெறுகிறார்கள்; வேறு சிலர் குறிப்பிட்ட நடைமுறைப் பயிற்சி ஆர்வத்தினால் பெறுகிறார்கள். அஃது எந்த வடிவத்தில் இருந்தாலும் பொருட்படுத்தக் கூடியதன்று. ஆனால், மனிதன் தன்னைத் தன் நிலையிலிருந்து உயர்த்தக்கூடிய ஏதாவது ஒரு வடிவத்தில் பரந்த மனப்பான்மையைக் கொள்ளாத வரையில் அவன் வாழ்க்கை உருக்குலைந்து காட்சியளிக்கும்; அவனுடைய குணநலன்களும் பொருந்தி வளர்வதில்லை. குணநலத்திற்கு மதிப்பு என்பது அண்டை வீட்டாருடைய மனத்தைப் புண்படுத்தா திருத்தல் அல்லது ஏதாவது ஒரு செயலைச் செய்வதன் மூலம் அவருடைய சுதந்தரத்தைக் குலைக்காதிருத்தல் மட்டுமன்று. அஃது அவனுடைய வளர்ச்சியையும் முன்னேற்றத்தையும் இன்னும் பல வழிகளில் தூண்டுகிறது.

**நன்னடத்தை :** நன்னடத்தை என்பது தீர்மானமான முடிவுகளையும் விரும்பும் செயல்களையும் உள்ளடக்கியது என்று வரையறுக்கலாம். ஒரு மனிதனது நடத்தை அவனது குணத்திற்குத் தொடர்பான செயல்களின் முழுமையான அமைப்பே யாகும்.

நன்மையான அல்லது தீமையான நடத்தையின் முக்கியத்துவம் வாழ்க்கையின் முன்னேற்றத்தை உயர்த்துவதிலோ அதற்கு எதிரான தன்மையிலோ காணப்படவேண்டும். அதன் பின்னர் மனிதனில் உள்ள அதே உணர்வின் கீழ்மட்ட வாழ்வின் நன்னடத்தை அல்லது தீயநடத்தைபற்றி நாம் பேசலாம். நம்மைநாமே நம் சொந்த நடத்தைகளின் பார்வையாளர்களாகக் கருதுகிறோம். இதனால் உண்டாகும் விளைவு என்ன என்பதைக் கற்பனை செய்யவும் முயல்கிறோம். இது வெறும் கண்ணாடியாகவே அமைகிறது. இதனால் பிறரது கண்ணோட்ட அளவில் நமது நடத்தையின் முதன்மையைத் துருவி ஆராய முடியும். இக் கருத்தினால் இது நம்மை மகிழ்விக்குமானால் நாம் பொறுக்குமளவுக்கு அமைதியை அடைகிறோம்.

**நண்பரைத் தேர்ந்தெடுத்தல் :** ஒருவன் எவன் மூலமாக நல்லவைகளை அடைய முடியுமோ, அவனே நல்ல நண்பனாக இருக்க முடியும். இன்பம், பொதுவான நன்மைகள், பொதுப் பண்புகளைப் பகிர்ந்து கொள்ளக்கூடிய சமமான அல்லது சமமில்லாத இருவ

டமும் நட்புரிமை இருக்கலாம். ஒருவருக்கொருவர் புரிந்துகொண்டு நல்லனவற்றை நாடும்படியாக ஏற்படுத்தும் அன்பு என்றும், இரு வரிடையே நன்மை ஏற்படுகின்ற அன்புதான் நட்புரிமை என்றும் நாம் வரையறுத்துக் கூறலாம். இதுதான் இன்பம் தரவல்லது பயனுள்ளது; நல்லது என்று நன்மையைப் பிரித்து ஆய்வதானல் நட்புரிமையையும் அவ்வாறே பயனுள்ளதென்றும் இன்பம் தரவல்ல தென்றும் நல்ல உண்மை நட்பை அளிப்பதென்றும் பிரிக்கலாம் இம் மூவகை நட்பும் ஒத்த நட்பாக இல்லாவிடினும் நட்புரிமை மூவகைப்படும் என்பதை நன்கு அறியலாம்.

**பயனுள்ள நட்புரிமை :** வியாபார நிறுவனங்கள் இத்தகைய நட்புரிமை கொண்டுள்ளன. நன்மையடையும் வழிகள் எவ்வாறு அளவில்லாதனவாக உள்ளனவோ அதுபோல மனிதர்கள் பயனுள்ள நட்புரிமையை வளர்த்துக் கொள்ளவும் ஏராளமான வழிகள் உள்ளன. தன் சுயநலத்துக்காக ஒருவன் மற்றவரிடம் பெற்றுக் கொள்ளும் பயன் உண்மையான நட்பாகாது. ஏனெனில் இது சுயநலச் சார்புள்ளதென்பதை மற்றவர் விரைவில் உணர்ந்து கொள்வர். பல வழிகளில் உண்மையான நட்பைப் பெறுதல் இருவருக்குமட்டுமே முடியும். ஒருவருக் கொருவர் உதவியாக இருந்து நன்மையடையும் இருவரின் நட்பு ஒருவர் மற்றவருடைய நலத்தை விரும்புவதாகவே இருக்க முடியும். ஒருவருக் கொருவர் நன்மைகளைச் செய்து நட்புக் கொள்பவர்களுள் ஒருவர் தன்னலத் தையே கருத முற்படுவாராயின், அத்தகைய தன்மை யுள்ள நண்பர்களிடம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இன்பம் வரும்போது கூடிப்பழகி, துன்பம் வரும்போது விட்டுப் பிரிபவர் உண்மை நண்பர் ஆகமாட்டார். இக் கருத்தையே 'உற்ற விடத்து உதவுபவனே உண்மை நண்பன்' ('A friend in need is a friend indeed') என்னும் ஆங்கிலப் பழமொழி உணர்த்துகிறது.

**இனிமையான நட்புரிமை :** தொடக்கத்தில் ஒருவருடைய கூட்டுறவால் மற்றவர் இன்பம் காண்பதால் பெரும்பாலோரிடம் நட்பு தோன்றுகிறது. இவ்வாறு தோன்றும் நட்பு பெரும்பாலும் இனிய நட்புரிமையாகவே தோன்றத் தொடங்குகிறது. ஏனெனில் எது நமக்கு உணர்ச்சி பூர்வமான இனிமையானதாகத் தோன்றுகிறதோ அவ்வுணர்ச்சியால் நாம் முதலில் கவரப் படுகிறோம். இனிமையான நட்பின் அடிப்படை இனிமையான எண்ணங்களை ஏற்படுத்துவதாக இருப்பினும் அத்துடன் அதனை நிறுத்திவிட முடியாது. பொதுவாக மகிழ்ச்சி தரக்கூடிய விளையாட்டுக்கள், இனிமையான உரையாடல்கள், நகைச்

சுவையைப் பங்கிடுதல் போன்ற இனிமையான சமூகப் பொழுது போக்குகளால் ஒருவரை ஒருவர் விரும்புகின்றனர். ஆரம்பத்தில் இனிமை காரணமாக நட்புக் கொள்ளுகிறார்கள்.

இனிமையான நட்பு என்பது குறிப்பாக இளைஞர்களிடையே காணப்படுகிறது. ஏனெனில், அவர்கள் குறிப்பாக உணர்ச்சியாலும் உள்ளுணர்வாலும் விரைவாலும் எளிதில் அன்பு செலுத்த முற்படுகிறார்கள்.

முழுமையான நட்புரிமை: மிகச்சிறந்த அன்பு கொண்ட இருவரால் இவ்வகை நட்புரிமை உணரப்படுகிறது. ஒரு மனிதனிட முள்ள உயர்ந்த அன்பே, அவன் வளர்த்திருக்கும் குணநலன். நற்குண ஒழுக்கம், இத்தகைய நற்பண்பின் வளர்ச்சியாலேயே மிகச்சிறப்பாக அமைகிறது. ஒத்த நற்பண்புகளைக் கொண்டவர்கள் இதனால் முதன்மையாகக் கவரப்படுபவர்கள், இயன்றவரையில் மனித நோக்குடன் உயர்ந்த முழுமையான நட்புரிமை யுடைய வர்களாகின்றனர். இத்தகைய முறையில் உண்மையான நட்புடை யவர்களின் நட்பு வேறுபாடுகள் கொண்ட கருத்தினாலோ, அல்லது தற்செயலாக ஏற்படுகின்ற கருத்துக்களினாலோ அடிப் படை கொள்வதில்லை. நற்குண அடிப்படையில் ஏற்படும் நட்புடன் ஒப்பிடப்பட்டால், பயனுள்ள நட்புரிமையும் இனிமையான நட்புரி மையும் ஒன்றுக்கொன்று தொடர்புடையதென்றும், முழுமையற்ற தென்றும் கூறலாம். ஏனெனில், பொதுநன்மை இவை யிரண்டிலும் இரண்டாந்தரமாகவே உள்ளது. நற்பண்பு அடிப்படையில் இணையும் மனிதர்களின் நட்பு அவர்களுக்கு நன்மை யுடையதாக வுள்ளது ஏனெனில், நற்பண்பு மனிதனை நல்லவனாக்குவதுடன், அவன் செயல்களையும் நன்மை தரத்தக்கதாக்குவதால், முழுமையான தாகவுள்ளது. இம்முறையில் நட்புக் கொள்ளும் மனிதர்கள் ஒருவரை யொருவர் மிகவும் நேசிக்கிறார்கள். ஏனெனில், நற்பண்புகள் கொண்ட நல்லவைகளை ஒவ்வொருவரும் தம்முள் அடக்கியிருக் கிறார்கள்.

நற்பண்புகளைப் பெறுதல்: அதிகபட்ச தீமைகளுக்கும் குறை களுக்கும் இடையே பொருத்தமான கருத்துக்களைத் தேர்வு செய்வதே நற்பண்பு ஆகும். நற்பண்பு என்பதன் இலக்கணத்தை முழுமையாக அறிந்துகொள்ள மேலும் சில கருத்துக்கள் குறிப் பிடப்பட வேண்டியது அவசியமாகிறது. தேர்வு செய்வதில் அடங் கிய பழக்கம், நற்பண்பு எனவும் கூறலாம். நாம் நல்ல பண்புள்ள செயல்களையே தேர்வு செய்வதாகக் கருதுகிறோம். ஒரு முற்கோளை,

ஏற்படுத்திக்கொண்டு, இக் கருத்தை மெய்ப்பிக்கிறோம். நம் அனுபவத்தால், தன்னிச்சையாக நாம் செய்யும் செயல்களைத்தேர்வு செய்கிறோம் என அறிந்துகொள்கிறோம். தேர்வுடன் தொடர்பு கொண்ட பழக்கங்களைக் கூறவேண்டியது நமக்கு அவசியமாகிறது. சில பழக்கங்கள், நம் தேர்வு இன்றித் தாமாகவே நம்முள் செயல் படுகின்றன. ஆனால் நற் பழக்கங்கள் தேர்வு இன்றி அவ்வாறிருக்க முடியாது. நற்புண்பு என்பது தீவிரத் தன்மைகளுக்கு இரு விதங்களில் இடைப்பட்டது. முதலாவதாக, இது கெட்ட குணங்களுக்கு இடைப்பட்டது என்று கொள்ளப்படுகிறது. ஒன்று அதிகமான பழக்கத்தால் விளைந்த கெட்ட பழக்கம். மற்றொன்று குறைவினால் ஏற்பட்ட கெட்ட பழக்கம். ஆனால், நற்பண்பு என்பது இரண்டாவதில் இடை நிலையாக உள்ளது. நம் உணர்ச்சிகளிலும், செயல்களிலும் இடைநிலையாக உள்ளதென்று பொருள் கொடுக்கிறது. மிக அதிகமாகவோ, அல்லது குறைவாகவோ செய்யப் படாமலோ, உணரப்படாமலோ இருக்கும் வகையில் நற்பண்பு நம் அன்புணர்வையும் செயல்களையும் வழிப்படுத்துகிறது.

செயல் முறையில் உடன்பாட்டையும், நிலையான தன்மை யையும் ஏற்படுத்துவதற்காக, முதலாவதாக, நமக்கு நற்குணங்கள் அவசியம். இரண்டாவதாக நல்ல செயல்முறை ஏற்படத் தயாரான நிலையையும், குறித்த நேரத்தில் முடிக்கும் தன்மையையும் உண்டாக்க, நற்குணங்கள் அவசியம். மூன்றாவதாக நல்ல செயல்முறையின் முழுப்பயனையும் அனுபவிப்பதற்காக நற்பண்புகள் தேவைப்படுகின்றன. நம்மிடம் இரண்டாவது குணமாக அமைகின்ற பழக்கத்தைத் தீவிரமாக எது கொடுக்கின்றதோ அந்த நல்ல பழக்கம் மூலம் இதைப் பெறலாம். மிகவும் பொருத்தமான இந்தப் பழக்கத்திலிருக்கின்ற நல்ல பழக்கம் மகிழ்ச்சி பெறுவதற்குக் காரணமாக அமைகிறது. இந்த முறையில் செயல் அனுபவம் நம்மிடம் இருக்கின்ற நற்குணங்களின் குறியீடாக அமைகிறது.

## நற்பண்பு

இது போதனையின் மூலம் பெறப்படுவதன்று. வாழ்க்கையின் நடைமுறை மூலம் பெறக்கூடியதாகும். நடை முறைப் பழக்க மல்லாது போதனையால் வருவதில்லை. நற்பண்பு என்பதற்குச் சிறப்பான காரணங்கள் இரண்டு உண்டு. நற்பண்பு என்பது அறிவு பூர்வமானதாக இல்லாமல் நடத்தையினால் வருவதாக இருப்பதாலும் போதனை என்பது, செயல்களுடன் நேர்டியாகத் தொடர்புபடுத்தப்படாததாலும் நாம் அதைச் சரியான முறையிலே போதிக்க முடியாது என்பதே முதற் காரணமாகும். இரண்டாவதாக மனிதனின் தேவைகளை நிறைவு செய்யும் ஆவல் எதில் அமைக்கப் பட்டுள்ளதோ, அதுவே நற்பண்பாகும்.

நற்பண்புகளின் சிறப்பான சாதனங்கள் பயிற்சி என்பதை நாம் உணரும்போது, அவை தம்மிச்சையாக நம்முள் தோன்று வதாலேயே அவை எவையும் இயற்கையானவை அல்ல என்று நாம் காண்கிறோம். ஒரு சிறந்த செயலைப் பலமுறை திருப்பிச் செய் வதால் ஒருவன் நற்பண்பை அடைந்துவிடுகிறான். நாம் செய்யும் செயல்களினால் நற்பண்புகள் உண்டாக்கப்படுவதால் நம் செயல்கள் அத்தகைய நற்குணங்களைக் கொண்டுவருவதாக அமைய வேண்டுமென்பது தெளிவாகிறது. நம்மிடம் நற்செயல் களைச் செய்வதற்கு நல்ல பண்புகள் இல்லாவிட்டால் நாம் எவ்வாறு இப் பண்புகளை உண்டாக்கக்கூடிய நல்ல செயல்களைச் செய்ய முடியும்? இதற்கு விடையாக நம்மிடம் நற்பண்புகள் இல்லா விட்டாலும்கூட நற்காரியங்களைச் செய்யமுடியும் எனலாம். மேலும், நம்மிடம் நற்பண்புகள் அமைகின்றவரையில் தேவையான வசதிகளுடனும், காலம் தவறாமையுடனும் செய்ய முடியாது.

நற்செயல்கள் என்ன என்பதை எவ்வாறு தீர்மானிக்க வேண்டும்? எது தீர்மானிக்கிறதோ அஃது அதிகமாகவோ, குறைவாகவோ இல்லாமலும் ஆகும் என்பது இவ் வழிகளை அடக்கியுள்ளது. ஏனென்றால், நற்பண்புகள் நல்லவற்றின் அளவு கோலாகக் கருதப்படுகிறது.

1. **நற்பண்புகளின் வகைகள் :** உறுதியான அன்பு, அறிவுத்திறன், விடாமுயற்சி இவற்றுடன் நற்பண்புகள் பிணைக்கப் பட்டுள்ளன. பெருந்தன்மை, பொறுமை, தயாளம், இடைவிடாத தன்னடக்கம் இவை அடங்கியவை ஆழ்ந்த நற்பண்புகளாகும். நீதி, தியாகம், நன்றியுணர்ச்சி ஆகியவை தன் விருப்பு ஆற்றலுடைய நற்குணங்களாகும். அறிவியல், அறிவாற்றல், ஞானம் அடங்கியது அறிவுபூர்வமான நற்குணங்கள்.

2. **தீயவைகள் :** 1. சிந்திக்காமல் செயல்படுகின்ற தன்மை குறைவான ஆய்வுக்கான வழிகள், 2. முன்யோசனை யின்மை; நடைமுறைத் தீர்மானத்தில் ஏற்படும் தோல்வி, 3. முன்னுக்குப் பின் முரண்படுதல், ஆலோசனையும் முடிவுகளும் ஆணையிட மறுத்தலும், 4. புறக்கணித்தல்—ஆணைகளைக் குறித்த நேரத்தில் முடிப்பதில் தவறுதல்.

3. **முழுமையான நற்பண்புகளின் தன்மைகள் :** ஒருவரது வாழ்க்கையின் சிறப்புக்கு அதிக அறிவாற்றல் மட்டுமே போதுமான தாகாது. அவர் இரக்கமும், அன்பும் கொண்ட இதய முடையவராக இருக்க வேண்டும். இவ்வாறு மிக உயர்ந்த அறிவாற்றலுடன் கூடிய உயர்ந்த இதயமும், பரந்தவிரிந்த அறிவும், முடிவற்ற அன்பும்

நமக்குத் தேவையாகும். அன்பற்ற அறிவாற்றலோ அல்லது அறிவற்ற அன்போ இருக்க முடியாது. ஒருவன் தன் இதயத்திற்காக அறிவையோ, அறிவுக்காக இதயத்தையோ விட்டுக்கொடுக்கக் கூடாது. ஆனால், ஒவ்வொருவரும் அளவிட முடியாத இதய உணர்வுகளைக் கொண்டிருக்க வேண்டும். அதே சமயத்தில் தேவையான அளவு எண்ணங்களையும் கொண்டிருக்கவேண்டும், நாம் எந்த அளவுக்கு இவைகளை இவ்வுலகில் கொள்ளவேண்டும் என்ற வரையறை ஏதும் இல்லை. இவ்வுலகம் எல்லைகளற்றுப் பரந்திருப்பது போல, நம் எண்ணங்களும், உணர்ச்சிகளும்., கலாசாரமும், கருத்துக்களும் பரந்திருக்க இடமுண்டு.

## பழக்கங்களைத் தகர்க்கும் முறை

ஒருவன் தன்னிடமுள்ள ஒரு பழக்கத்தை நிறுத்த வேண்டும் என்று நினைத்தால், அவன் எந்தச் சூழ்நிலை சமுதாயம் ஏற்காதோ அதற்குத் தன்னை உட்படுத்திக்கொள்ளும் நிலையை உண்டாக்க வேண்டும். இது சமுதாயத்தில் அவனுக்கு ஒரு பெரிய எதிர்ப்பை உண்டாக்கும். அதன் பிறகுதான் அவன் தான் கொண்டுள்ள பழக்கத்தை உடைத்தெறிய முடிகிறது. இதைப்போல நற்பழக்கங்களைப் பதிவு செய்துகொள்வதற்கும் வழிமுறைகள் உண்டு. எடுத்துக்காட்டாகத் தேர்வுகளில் நடக்கும் தவறான பழக்கங்களைப் போக்க, தவறு செய்கின்ற மாணவர்களைச் சமுதாயத்தின் கண்டனத்துக்குட்படுத்த வேண்டும். ஒரு நல்ல பழக்கத்தை அமைத்துக்கொள்ளும் வழியைப்போல, தீய பழக்கத்தைத் தகர்க்கும் முயற்சியிலும், எந்த வித விதிவிலக்கும் நிகழ்ந்துவிட அனுமதிக்காதிருக்க ஒருவன் தீர்மானமாக இருக்க வேண்டும். விதிவிலக்குகளை அனுமதிக்காதிருக்கும் இம் முடிவையடைய அத் தனிமனிதனிடத்திலுள்ள சரியான ஊக்குவிக்கும் தன்மையும் தேவையானதாகிறது. ஒரு வலுவான ஊக்குவிக்கும் சக்தியில்லாத வரையில், தவறானதொரு பழக்கத்தை உடைத்தெறிதல் என்பது சாத்தியமானதன்று. தீய பழக்கங்களின் விரும்பத்தகாத விளைவு களிலுள்ள முழு நம்பிக்கைகளையும், தீய பழக்கங்களைத் தகர்த் தெறிவதிலுள்ள இலாபத்தின் நம்பிக்கையையும் தனிமனிதனது தனிப்பட்ட வாழ்வுடன் தொடர்பு படுத்தப்பட வேண்டும். ஒரு புனித நூலின்மீதோ, சமயப் பிரசாரங்களின்மீதோ, கடவுளின் மீதோ, தாயின்மீதோ எதனிடம் உணர்ச்சி பூர்வமாகத் தொடர்பு கொண்டுள்ளானோ அவற்றின் மீதோ விதிவிலக்குகளை அமைப் பதில்லை என்ற ஒரு சத்தியப் பிரமாணம் அல்லது உறுதிப்பாடு செய்துகொள்ள வேண்டும். இத்தகைய உணர்ச்சி பூர்வமான ஊக்குவிக்கும் ஆர்வம் தீய பழக்கங்களை விரைவாகவும் வெற்றிகர மாகவும் நீக்க ஒருவனுக்கு உதவியாயிருக்கும்.

## சரி, தவறு என்பதை வேறுபடுத்தியறிதல்

சரி, தவறு என்பவற்றைப் பகுத்தறிதல் என்பது கருத்து பாரம் பரியப பழக்கங்களால் ஏற்பட்டவையல்ல. அவை உண்மையடிப் படையில் உண்டானவையே யாகும். 'ராக்டஸ்' எனப்படும் இலத் தீன் வார்த்தையிலிருந்து வந்தது சரி எனப்படும் சொல். இது'நேரா ன' ஒரே வரிசைகளில்' என்ற பொருள்படும். பொதுவழக்கில், சில திட்டங்களை உறுதி செய்யும் அர்த்தத்தை இது கொடுக்கிறது. சில ஒழுக்கவியலறிஞர்கள், நல்லொழுக்கம் என்ற துறையில், சரி, தவறு என்பது உடனே அறிந்துகொள்ளக் கூடிய தென்றும், அதனை அடிப்படையிலே இதற்குரிய தென்றுகுறைக்கப்படக் கூடியதென்றும் கருதுகிருர்கள். வேறு சிலர் சரியான செயல் என்பது, அதனைச் செய்பவனுக்கோ அல்லது உலகினுக்கோ நல்லவைகளை உண்டு பண்ணக்கூடியதாக இருக்க வேண்டும் என்கிருர்கள். காலத்திற்கேற்பச் சரி, தவறு என்பதில் மனிதனின் கருத்து இடத்திற்கிடம் வேறுபடுகிறது. ஓர் இடத்தில் சரியான செயல் எனக் கருதப்படுவது வேறு இடத்திற்குச் சரியற்ற தாகிறது. சரி என்பது சூழ்நிலையைச் சார்ந்துள்ளது. அதற்கு மாருக, எண்ணம் என்பது சூழ்நிலையைச் சாராதது.

ஒழுக்கவியலில், ஒரு செயல் சமுதாயத்திற்கு முன்னேற்றத் தையும், மக்களது மனத்தில் மதிப்பையும் வளர்ப்பதாக இருந்தால் அதைச் சரியான செயல் என்று கூறுகிருேம். ஒழுக்கமாக இருப்பது நம்மிடமும், பிறரிடமுமுள்ள தனித்தன்மையை மதிப்பதே யாகும். சரி என்பது உறுதியான மனமுள்ள மனிதனைக் குறிக்கும். தவறு என்பது மறுதலிக்கும் மனம் படைத்த மனிதனைக் குறிக்கும். சரியான செயல்முறையைத் தேர்வு செய்வது எப்பொழுதும் சுலப மானதன்று. மாறுபட்ட கருத்துக்கள் ஏற்படும்போது நாம் சரியா கவோ, தவருகவோ, நடந்திருக்கிருேமோ என்று சந்தேகிக்கும் சமயங்களிலும் நற்காரியங்களாலும், உயர்ந்த அறிவாற்றலாலும் ஏற்படும் தீர்வுகள் அவசியமாகின்றன. நடத்தையைப்பற்றி முடிவு செய்யும்போது, விளைவுகள், வழிகள், உள்நோக்கங்கள் ஆகிய வைகளைப்பற்றி மனத்தில் கொள்ளுதல் வேண்டும். இதில் எதையும் நாம் ஒதுக்கிவிட முடியாது.

## சட்டத்திற்கு உடன்படும் தன்மைக்கும், ஒழுக்கமுடைமைக்குமுள்ள வேறுபாடு

நன்னடத்தையின் விளைவான நற்பண்பு, சட்டம் ஆகியவைகள் உள்ளார்ந்த, புறம்பேயுள்ள செயல்களின் தத்துவங்களுடன் தொடர்புகொள்கின்றன. இப் பண்புகள் உள்ளார்ந்த கருத்துக்

ளாகின்றன. ஏனெனில், வகுப்புக்கள், ஆய்ந்தறியும் சக்தி, செயல்களின் காரணம் ஆகியவற்றின் பண்பு அடிப்படையான மாற்றங்களாகின்றன. சட்டம் என்பது மனிதர்களால் தேடப்படும் பொதுமுடிவிற்கான நல்லொழுங்கையும் ஒரே சீரான பரந்த குறிக்கோளையும் பற்றிய வெளிப்படையான செயல் தத்துவமாகும். சட்டம் ஒருவனை ஒரு செயல் செய்வதற்கும் செய்யாதிருப்பதற்கும் தூண்டும் அளவுகோல் போல உள்ளது. இஃது எதைச் செய்ய வேண்டும், எதைச் செய்யக் கூடாது என்று ஒழுங்கு முறையைப்பற்றியது. சட்டம் அறிவாற்றலுடன் தொடர்பு கொண்டுள்ளது. தனிமனிதன் நலத்தைவிட உலகியல் வழக்கில் எவை செய்யத்தக்கவை என்பதை வரையறுக்கக்கூடியதாக அமைந்துள்ளது சட்டம். ஒரு சமுதாயத்தின் உறுப்பினராக இருக்கும்வரையில், தனிமனிதன் நன்மையைவிடச் சமுதாயத்தின் நன்மையே பொதுவாகக் கருதப்படுகிறது.

அரசை நடத்தும் முறையை எடுக்கும்போதுதான் போதுமானதாகச் சட்டத்தை ஆராய முடியும். ஒழுக்க முறைக்குப் பொருந்திய சட்டங்கள் நடைமுறையில் செயலாக்கப்படுகின்றன. ஒரு மனிதனது இன்பம் நல்லொழுக்கமுள்ள நடத்தைகளில் வெளிப்புற அளவினால் வலியுறுத்தப்படுகிறது.

## நன்மை தீமைகள்

தனிப்பட்ட நன்மை யென்பது ஒருவனுக்கு மட்டும் ஏற்படும் நன்மையே தவிர, அது மற்றவர்களின் நலனைக் குறிக்காது. தனிப்பட்ட ஒருவனால் கொள்ளப்பட்ட நன்மை, நேர்மை போன்ற உணர்வினடிப்படையாலாகியதோ அல்லது தொப்பி போன்ற உலகியல் கருப்பொருளாலாகியதோ எதுவாயினும், மற்றவர்களினால் கொள்ளப்படும் நலனிலிருந்து வேறுபடுத்தப்பட்டதாகும். அதற்கு மாறாக, ஒரே நேரத்தில் ஒரு நல்ல பொதுவான தன்மையைப் பலரால் கொள்ள முடியும். பொதுவான நல்ல முறையில் நடத்தப்பட்ட தர்க்கத்தடிப்படையில் குறிக்கோளைக் கொண்ட நன்மையே ஒரு பொதுநன்மையாகும்; அதுவே அத்தர்க்கத்தில் ஈடுபட்டவர்களால் உணரக் கூடியதாகும்.

அதற்கு மாறாக, உண்மையான பொதுநலம் என்பது ஒரே சீராக உலகமெங்கும் வியாபித்திருக்கக் கூடியது. அது தனிப்பட்ட நலன்களின் திரட்டு அன்று. ஆனால், அஃது எல்லாருக்கும் நன்மையைத் தரவல்லது. அது தன்னுடைய தனிப்பட்ட நலனை முடியாதபடி ஒவ்வொருவராலும் கொள்ளப்படுகிற மொத்தமான நலமாகும்.

தனிப்பட்ட ஒருவனுல் கொள்ளப்பட்ட பொதுநலம் எந்த ஒருவரையும் எவ்வழியிலும் அந்நிலையைக் கொள்ள முடியாதபடி செய்ய இயலாது. மேலும், மற்றவர்களும் அதைப் பெற்றிருப்பதால் எவ்வகையிலும் குறையாது. ஏனெனில், அதன் ஒரு பகுதியை மட்டும் கொள்ளாமல் எல்லாரும் மொத்தமாகவே கொள்கின்ற காரணத்தால் இவ்வாறு ஏற்படுவதில்லை.

தனிப்பட்ட நலனுக்கும் பொதுநலனுக்குமிடையே பல முரண்பாடுகள் ஏற்படலாம். சில இடங்களில் இரண்டிற்கும் சரியான உறவை எளிதாகக் காட்டமுடியாது. இந்நிலையில், எல்லாப் பொது நலன்களும் ஒவ்வொரு தனிநலனை விட உயர்வானது இல்லை என்று கொள்ளுதல் நலம். கீழ்நிலையில் அமையும் பொது நலன் மேல்நிலையிலுள்ள தனிநலனுக்கு வழிவிடவேண்டும். ஒரு விளையாட்டுப் போட்டியில் ஏற்படும் பொது வெற்றிக்காக ஒரு தனி மனிதனின் உடல்நலத்தைத் தியாகம் செய்ய வேண்டுவதில்லை. அல்லது ஒரு குடும்பத்தின் நலனுக்காக ஒரு தனிமனிதனின் நேர்மை பலியிடப்பட வேண்டியதில்லை. ஆனால், அதனுள் அடங்கிய பொதுநலன் தனிநலனை விட உயர்வானது. அமைதியும், ஒழுங்குமான பொதுநலன், சமுதாயத்தின் உறுப்பினரான மனிதர்கள் கொண்டுள்ள தனிநலனைவிட உயர்வானது.

## நல்லொழுக்கம், தீயொழுக்கம், ஒழுக்கமல்லாச் செயல்கள்

மனிதனின் நடத்தையடிப்படையில், எந்த ஒழுக்கச் செயல்களும் சமுதாயத்தால் அங்கீகரிக்கப்படவோ, நிராகரிக்கப்படவோ கூடியவை. இவ்வாறு அங்கீகரிக்கப்பட்டதாகி நிராகரிக்கப்பட்ட எல்லாச் செயல்களும், ஒழுக்க நடத்தைகளின் தோற்றமாக இருக்கின்ற அதே நேரத்தில், ஒழுக்கத்திற்குப் புறம்பான செயல்களாகவும், அமைந்துவிடுகின்றன. பயன்படுந்தன்மை, நல்லொழுக்கத்தின் நிராகரிப்பு, அங்கீகாரம், ஆகியவை நடத்தையையும் நல்லொழுக்கத்தையும் நோக்கியே அமைகின்றன.

நல்லொழுக்கம், தீயொழுக்கம் என்ற குணங்கள் இதயத்தின் உணர்ச்சிகளாலும், நல்லொழுக்கத்தாலும் வரையறுக்கப்பட்டதாகின்றன. ஏனெனில், எல்லா நிகழ்ச்சிகளும் இதயபூர்வமாகச் செயல்படுகின்றன. நல்லொழுக்கத்தை அளவிடும்போது மனம் ஒரு குறிப்பிட்ட நடத்தை முறையையே தேர்வு செய்கிறது. ஒன்றைச் சரியென்றும் மற்றதைத் தவறென்றும் கூறுகிறது. ஒன்றே

சரியானது; நேர்மையானது; தகுதிக்குடையது என்றும் மற்றதைப் பழிப்புக்குரியது, தவறானது தண்டனைக்குரியது என்றும் கூறுகிறது. மேலும், நமக்குச் சரியனெப்படுவதை, பொருத்தமுடையதை, செய்யக் கூடியதை ஒழுக்கமுடைய செயல் என்றும் மற்றவைகளைப் பொருந்தாச் செயல்கள் என்றும், சரியற்றவை என்றும் எண்ணிவிடுகிறது.

நல்லொழுக்கச் செயல்களை முதன்மையடிப்படைச் செயல்களென்றும், தகுதியில்லா மற்றச் செயல்களென்றும் இரு வகைகளாகப் பிரிக்கலாம். முதன்மையடிப்படையான என்பது சரியான- தகுதியான- என்பதைக் குறிக்கும். ஏற்றுக்கொள்ளத்தக்கது என்றும் அல்லது புகழப்படத்தக்கது என்றும் கொள்ளும் அதே நேரத்தில் தகுதியின்மை நிராகரிப்புக்கும், குற்றப்படுத்தப்படுதற்கும் தக்கதாகிறது. ஒரு செயல் என்பது பாராட்டப்படத்தக்கதாக இருக்க வேண்டும் என்பது தகுதியான செயல் என்றும் தண்டிக்கப்படுதற்குரியதானால் அது தவறான செயலென்றும் கூறப்படுகிறது.

நல்லொழுக்கத் தவறுகள், குறைகளில் ஏற்படும் தவறுகள் என்றும் கருதப்படலாம். வெளிப்படையாக, நாம் குற்றமென்றும், பாவமென்றும் கூறுகிறோம். நம்முடைய வெளிப்புறச் செயல்களுக்கு மெருகேற்றத் தவறிவிட்டாலும், நற்குண நலம் பெரும்பாலும் தவறான செயல்களில் முடியாது எனலாம்.

எல்லாச் செயல்களும் ஒழுக்கமுடையனவாகவோ, ஒழுக்கமற்றவையாகவோ அல்லது ஒழுக்கத்திற்குப் புறம்பானவையாகவோ ஆகலாம். ஒரு பூச்சியின் தாக்குதலால் கண்ணை மூடித்திறத்தல் என்பது அனிச்சைச் செயல். அந்த அளவில் அது ஒழுக்கமுள்ள செயலாகவோ, அல்லது ஒழுக்கமற்ற செயலாகவோ ஆகாது. இஃது ஒழுக்கத்திற்குப் புறம்பான செயல். அதேபோல் அறிவியல் கண்டுபிடிப்புக்கள் அவைகளாகவே, ஒழுக்கமுள்ள செயல்களாகவோ அல்லது ஒழுக்கமற்ற செயல்களாகவோ இருப்பதில்லை. அணுவைப்பிளத்தல், அதனுள் இருக்கும் சக்தியைக் கண்டறிதல் போன்றவை ஒழுக்கத்திற்குப் புறம்பான செயல். அணுவின் ஆற்றலை மனித சமுதாயத்தின் நலனுக்காகப் பயன்படுத்துதல் ஓர் ஒழுக்கமுள்ள செயல் ஆகும். அதே ஆற்றலை மனித இனத்தினர் அழிவுக்காகச்செயல்படுத்துதல், அல்லது மனித இனத்தைப் பயமுறுத்தும் கருவியாகப் பயன்படுத்துதல், உண்மையிலேயே, ஒரு தீயொழுக்கமுள்ள செயலாகும். இதேபோல், திரைப்படம், வானொலி, தொலைக்காட்சி போன்ற இவைகள், அவைகளாகவே தீயவையல்ல. அவை மக்களால் பயன்படுத்தும் விதத்திலேயே நல்லவையாகவோ தீயவையாகவோ மாறுகின்றன.

### அத்தியாயம் - 1

# சூழ்வினைக்கேற்ப நம் பிரதிவினை

## தனிமனிதனும் சூழ்நிலையும்

ஒருவன் தன் பிறப்புமுதல் எப்போதுமே ஒரு குறிப்பிட்ட சூழ்நிலைக்குச் சம்பந்தப்பட்டவனாக இருக்கிறான் என்பதை நாம் அறிந்துள்ளோம். அத்தகைய சூழ்நிலை இயல்பில் சமூகப்போக்குடையது. எனவே, அது ஒருவனுடைய சகோதர சகோதரிகளுக்கு நெருங்கிய தொடர்புடையது. மனிதன் ஒரு சமூக உணர்வுடையவன். தன் குழுவிற்குச் சொந்தமான, சொந்தமில்லாத மனிதர்களுடன் வாழ்கிறான். சமூகம் என்ற கருத்தை ஆராயும்போது அது சில குறிப்பிட்ட பொதுவான அம்சங்களாகிய மொழி, மதம், பழக்கவழக்கங்கள், பாரம்பரியங்கள் முதலியவைகளால் பின்னப்பட்ட ஒன்று என்று அறியப்படுகிறது. இந்த சமூகம் ஒருமித்த சமூகமாகும். ஆனால், எப்பொழுதும் உண்மை ஆகாது. சில சமயங்களில் பொதுவான பந்தங்கள் இல்லாமல் பல தரப்பட்ட மக்கள், ஒரே மாநிலத்தைச் சார்ந்து ஒன்றாக இணைந்து வாழலாம். இருப்பினும், அது ஒரு சமூகம் என்று அழைக்கப்படுகிறது. ஒரே மாநிலத்தைச் சொந்தமாக்கிக் கொண்டு, அதன் பொதுவான சட்டங்களைக் கடைப்பிடிப்பதாலும் அவர்கள் ஒரு சமூகமாகப் பிணைக்கப்படுகிறார்கள். கீழான நிலையிலுள்ள கிராமம் அல்லது பழங்குடி மக்கள் நிலையிலும் சமூகப் பிணைப்பு மிகவும் ஊறுதியாக உள்ளது. ஆனால், மேலே போகப்போக மொழி, மதம், கலாச்சாரத்திலும் மிகப்பெரிய வேறுபாடுகள் உண்டாகத் தொடங்குகின்றன.

'சூழ்நிலை' என்பதற்கு மற்றோர் அம்சமானது, புற உலகில் வாழும் மக்களையும் குறிக்கும். மக்கள் வசிக்கும் இந்த உலகத்தில் உள்ள மற்ற சில புறவேறுபாடுகளைக் கருதுவோமானால் சூழ்நிலை என்ற வார்த்தையின் மற்ற ஒரு பொருளும் புலப்படும். மனிதனின் வாழ்க்கையில் புறவேறுபாடானது (காலநிலை, மழை, வெப்பநிலை, ஓர் இடத்தில் பல்வேறு இயல்புகள் இவைகளில் காணப்படும் வேறுபாடு) ஏற்படுத்தும் விளைவுகள் குறிப்பிடத்தக்கவை. மக்களின் பல்வேறு பகுதியினரிடையே சுற்றுப்புறத்தின் காரணமாகவும் சூழ்நிலை வேறுபடலாம். இதனாலேயே பன்றி போன்ற மிருகங்கள் வளர்க்கப்படும் இடங்கள் நீரில்லாத இடமாயினும் அவ்விடங்களில் வாழும் மனிதனின் வாழ்க்கை முறையில் தனிச் செல்வாக்கும் உண்டு.

வாழ்க்கை என்பது ஒரு மனித உயிர் மிருகங்கள் அல்லது சூழ்நிலைக்கும் இடையே நிகழும் வினைகளேயாகும். சூழ்நிலையை

மக்களின் தேவைக்கேற்ப உருவாக்கிக் கொள்வது இல்லையேல் மனிதன் தேவைகளைச் சூழ்நிலைக்கேற்ப மாற்றிக் கொள்வது என்பதில் இது பொருந்தியுள்ளது. நாம் சூழ்நிலையின்படி நடக்கிறோம்; இல்லையேல் சூழ்நிலை நம்மீது செயல்படுகிறது. நம்முடைய தேவைகளைப் பூர்த்திசெய்ய நம்மால் மாற்றப்பட்ட சூழ்நிலைக்கேற்ற நம் பிரிவினைகள் பயன் உள்ளனவாக இருக்க வேண்டும். அப்போதுதான் வாழ்க்கைப் போராட்டத்தில் வெற்றி பெற்று நம்மால் வாழமுடியும். நம் முயற்சிகள் வெற்றி பெறவும், அவை நம்மை இன்பமாகவும் அமைதியாகவும் வாழவைக்கவும் நாம் சூழ்நிலையை நன்றாக அறிந்திருக்க வேண்டும். தவறான அனுசரணையும் தேவையான அளவுக்கும் குறைவான அளவில் கொடுக்கப்பட்ட எதிர் வினையும் வீணான முயற்சிகள் ஆகும். இங்கிலாந்தின் கரையிலிருந்து அமெரிக்காவுக்குக் குடியேறிய யாத்திரிகத் தந்தையர், மிகவும் விரோதமான சூழ்நிலையைக் கண்டார். எல்லாரும் பார்த்துப் பின்பற்றும் இனிமையான தன்னுடைய விடாமுயற்சியால் அதை வளமுடைய நாடாக்கி அங்குக் குடியேற்றங்களை ஏற்படுத்துவதில் வெற்றி பெற்றார். அதேபோல் ஒரு குறித்த வட்டத்தில் ஒருவர் சூழ்நிலையின் இயல்பைப் புரிந்துகொண்டு அதற்கேற்ப மாறத் தம்மாலியன்ற அளவுக்கு முயல வேண்டும். நம்முன் வைக்கப்பட்டுள்ள முக்கியமான கேள்வி என்பது நாம் எவ்வாறு சூழ்நிலையைச் சரியாகப் புரிந்துகொண்டு அதற்கேற்ப நம் நடத்தையை வழிவகுப்பது என்பதே. இது முக்கியமான விரிவான கேள்வி. இதுதான் வரும் பக்கங்களில் முக்கியமான பொருளாகிறது. மூக்கியமான சிறப்பான அம்சங்களை எடுத்துக்கொண்டு விரிவாகக் குறிப்பெடுத்து ஆராய்வதே நம்மால் செய்ய முடியும். இதுவே நம் படிப்புக்கும் அடிப்படையாகும்.

## *பார்வை, பேச்சு, கேள்வி, அவ்வுணர்ச்சிகளின் பயனிலுள்ள உபயோகங்கள்*

நாம் பார்த்தல், கேள்வி முதலிய அறிவுணர்ச்சிகளை மிகவும் பயன் உள்ளனவாகப் பயன்படுத்தவும் நோக்கல், கவனித்தல், ஆழ்ந்தாராய்தல் முதலிய செயல்களே சூழ்நிலைக்கேற்ற சரியான பிரதிவினைக்கு அடிப்படையாகின்றன. மாற்றங்களை வரவேற்கவும் மன நிலையை மாற்றிக் கொள்ளுதல், சரியாக யோசித்தல், பகுத்தறிதல் முதலிய செயல்களும், இதற்குத் தேவையான முறையாகும். நம் உணர்ச்சி உறுப்புகளைச் சரியாகப் பயன்படுத்தத் தெரிந்து கொள்ள வேண்டும். நம் விருப்பங்களைச் சரியான முறையில் செயல்படுத்தவும், சரியான முறையில் எண்ணவோ, அல்லது ஆராயவோ பல முறைகளும் உள்ளன. கவனித்தல், உணர்தல் ஆகியவற்றுக்கான முறைகளைக் கொண்ட உற்று நோக்கல் என்ற முறையைப்பற்றி நாம் முதலில் எடுத்துக்

கொள்வோம். சூழ்நிலையைச் சரியாகக் கூர்ந்து நோக்கத் தெரியாதவர் அவரது சுற்றுப்புறங்களைப் பற்றிச் சரியான விவரங்களைப் புரிந்துக்கொள்ளவும் தவறுவதால் அச்சுற்றுப்புறத்தை நோக்கும் குணமுடையவராக இருக்கவேண்டும் என்பது தெள்ளத் தெளிவாகிறது. சிறந்த அறிவு இல்லாவிட்டால் ஒருவர் மிக்க துன்பங்களைச் சந்திக்க நேரிடும். சில நொடிகளுக்கு முன்பு பேசியவரின் பெயர் அல்லது உருவத்தை நினைவுக்குக் கொண்டு வரமுடியாத மறதியையும், கவனமின்மையையும் உடைய மக்கள் நம்மில் பலர் இருக்கிறார்கள். இவ்வாறு நம்மில் பலர் பணப்பை சாவிக்கொத்து இவைகளை வைத்த இடத்தை மறந்து, தங்கள் பொன்னான நேரத்தை அதைத் தேடுவதிலேயே கழிக்கிறார்கள். நம்மில் பலர் மனத்தை ஒருமுகப்படுத்தும் தன்மை இல்லாதவர்களாக உள்ளனர். நாம் சூழ்நிலையிலுள்ள முக்கிய மானவற்றைக் கவனிக்காமல் ஒரு சிலவற்றை நினைவில் வைத்துக் கொள்வோம். நம்மில் பலர் சந்தர்ப்பங்களையும் நிகழ்ச்சிகளையும் அவற்றின் அடையாளங்களையும் புறக்கணிப்பதால் தவிர்க்க முடியாத துன்பங்களுக்கு ஆளாகிறார்கள். அனேகர் அறிவைப் பற்றிய விரிவுரையைக் கவனிக்கும்போது அவர்கள் விரிவுரையாலான விஷயம் சொல்லப்பட்ட எல்லாக் கருத்துக்களையும் மறந்து, 'அவர் பேச்சு மிகவும் கிளர்ச்சியூட்டத்தக்கதாக இருந்தது, என்று கூறுவார்கள். செஸ்டர்டன் எழுதிய பிரௌனிங்ஸ் கதைகள் அல்லது கானன் டொயில் எழுதிய ஷெர்லாக் ஓம்ஸின் துணி கரமான செயல்கள் என்ற புத்தகங்களை மாணவன் படித்தால் தெளிவில்லாத, ஆனால், முக்கியமான கருத்துக்களைப் புரிந்து கொள்வதில் சுலபமாகத் தவறிவிட்டோம் என்பதை எளிதில் புரிந்துக்கொள்ள முடியும். மக்களை நாம் கவனிக்கும்போது அவர்கள் பொருள்களைப் பற்றி நினைக்கிறார்கள் என்பதையோ அல்லது உணர்கிறார்கள் என்பதையோ நாம் கவனிப்பதில்லை.

## உற்றுநோக்குதலின் முக்கியமான தனித்தன்மைகள்

சரியான உற்றுநோக்குதல் பயிற்சியினால் உருவாக்கப்பட வேண்டும். ஒரு நல்ல உற்றுநோக்கும் தன்மை உடையவராக இருப்பதற்கு அறிவாற்றலுக்குரிய ஆர்வமும் அறிவுக்கு வேண்டிய நாட்டமும் போன்ற காரணக் கூறுகளால் ஒழுங்குபடுத்தக்கூடிய மனநிலை வேண்டும். ஒருவனுடைய தேவைகளின் சிறுவட்டத்திற்கு அப்பாற்பட்டதாக உள்ள பொருள்களைப்பற்றி அறிவதற்குக் குறைவான ஆர்வம்கூட இல்லாதவன் மட்டமான உற்றுநோக்கும் தன்மை உள்ளவனாகிறான். பொதுவான உணர்ச்சிகளற்ற தன்மை, தன்னை வெளிப்படுத்துகின்ற தன்மை இல்லாதிருப்பவன் ஒருவனுடைய

குறிப்பிட்ட வட்டத்திற்கு அப்பாற்பட்ட பொருள்களைப்பற்றிய முழுமதிப்பின்மை ஆகியவை மட்டமான உற்று நோக்கலுக்கு மூலகாரணங்களாகும். நம்மில் அனேகர் இந்தக் குழுவையே சார்ந்திருக்கிறோம். அறிவிற்கான உள்ளார்ந்த ஆர்வம் தற்போதைய நூற்றாண்டுகளின் அநேக விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளுக்குக் காரணமாக உள்ளது. உற்றுநோக்கல் என்பது சுத்தமான இயல்பியல் முறையன்று. இது மனநிலையைச் சார்ந்தது. ஒரு பொருளிடத்துக்கொண்ட வெறுமையான நோக்கு அல்லது ஒரு நிகழ்ச்சி உற்றுநோக்கலைச் சார்ந்ததன்று. உள்ளமானது விழிப்புணர்ச்சியுடன் இருக்கவேண்டும். அதே நேரத்தில் இம்முறையின் பல விரிவுகளைக் குறித்துக்கொள்ளுதல் வேண்டும். உற்றுநோக்கலின் இயற்பண்புகள் உண்மையிலேயே தெளிவாக உள்ளன. எனவே, பார்க்கப்பட்டதோ அவற்றை ஆராய்வதில் இதே போல் ஒத்த மற்ற நிகழ்ச்சிகளை ஒன்று திரட்டுவதிலும் அவற்றை ஒன்றுகத் தொகுப்பதிலும் மனத்தின் செயல்கள் அடங்கியுள்ளன. ஒரு நல்ல பார்வையாளருக்கான முக்கியமான தேவை என்பது. அவர் உண்மைகளை உற்று நோக்குதலில் எந்த வெறுப்பும், சரிவற்ற மனநிலையும் அற்றவராக இருக்கவேண்டும். அவர் தம்முடைய சொந்த வழியிலேயே விளக்குதல் கூடாது. தாம் முன்னமேயே பெற்றுக்கொண்ட கருத்துக்களின் சார்பாக மனிதர்கள் எதிர்க்கட்சியினுடைய மோசமான கருத்துக்களில் தங்கள் கவனத்தைச் செலுத்துவார்கள். மேலும், தங்களுடைய கட்சியினுடைய குறைகளைக் கண்கொண்டும் பார்க்கமாட்டார்கள். இது ஒரு பொதுவான அனுபவம் ஆகும்.

## கவனித்தலின் முறைகள்

கவனித்தலாவது கவனத்தையும், உணர்வுக் காட்சியையும் கொண்டதாகும். ஒரு புதுச் சூழலை உணர்வதற்கு கவனம் ஆரம்ப நிலையாக இருக்கிறது. நாம் கவனிக்காத காரியங்களைக்காட்டிலும் கவனிக்கும் காரியங்களில்தான் அதிக அக்கறை காட்டுகிறோம். இதனுல் நாம் மற்றவற்றில் அக்கறையற்றவர்கள் அல்லர். நமது கவனத்திற்குவேண்டியவை மிகவும் குறைவான அளவில் தென்படுகின்றன. ஒருவன் கணிதத்தில் தொடர்ந்து கணக்குகளைப் போட்டுக்கொண்டு எவ்வளவுதான் உன்னிப்பாக இருந்தாலும் அவன் தெருவில் போகிற வாகனங்களின் ஓசையையும் கடிகாரத்தின் அலார ஓசையையும், தூரத்திலிருந்து வரும் ரயில்கள் ஓசையையும்மற்றவற்றையும் கேட்கிருன். இவை யாவும் அவன் மன உணர்வின் விளிம்பில் உள்ளதேயன்றி அவன் மனத்தின் ஆழத்தில் உள்ளவையல்ல.

சாதாரணமாகக் கவனித்தலை நாம் இருவகையாகப் பிரிக்கலாம். ஒன்று (அ) விரும்பிக் கவனித்தல், (ஆ) தன்னிச்சையாகக் கவனித்தல், அல்லது கவனத்திற்கு அப்பாற்பட்டது. முதல் வகைக்கு எண்ணங்கள் திரட்டப்பட்ட கவனம் தேவை. ஏனெனில், பொருள்கள் புதியனவாக உள்ளன. இதை ஒருவிதச் சுமையுடன்தான் கவனிக்க வேண்டும். ஒரு குழந்தை எண்ணிக்கையைக் கற்றுக்கொள்வதற்கோ அல்லது எழுதுவதற்கோ அக்குழந்தை இயற்கையிலேயே அவற்றின்மீது நாட்டமில்லாமல் அதன் பெரியவர்களின் வற்புறுத்தலால் அவைகளைக் கற்றுக் கொள்ளவேண்டியிருக்கிறது. இஃது ஓர் அளவில் உடல் மனச்சுமையாகக் குறிப்பிடப்படுகிறது. நாம் எவற்றைக் கற்க வேண்டுமென்றாலும் அதற்குத் தன்னிச்சையில்லாமல், கட்டாயப்படுத்தப்பட்ட கவனம் ஓரளவு தேவை. ஒரு சிறிது பயிற்சிக்குப்பிறகு ஊக்கம் அதிகரிப்பதால் கவனம் இப்போது கட்டாயப்படுத்தப்படுகிறது. செயல்குறைக்கு இது மகிழ்ச்சியைத் தரக்கூடிய கவனிப்பாக இருக்கிறது. எந்தப் புதுக்கற்றலிலும் துன்பத்தினால்தான் விருப்பும் வெறுப்பும் உண்டாகின்றன. மாணவன் தன்னை இந்த நிலையிலிருந்து மாறாமல் ஈடுபடுத்திக்கொள்ள வேண்டும். ஏனெனில், கட்டாயக் கவனிப்பு நாளடைவில் ஆர்வமுடையதாக மாறிவிடும். ஏனெனில், புறத்தூண்டுதல்கள் அவற்றைக் கவனிக்கத் தாமாகவே செயல்படுகின்றன. நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், பெரிய இடிஓசை போன்ற சப்தத்தை நாமாகவே கேட்கமுடிகிறது. நம்மை மீறிக் கவர்ச்சிமிகு வண்ணப்படம் நம் கவனத்தை ஈர்த்துவிடுகிறது. இதுவே நம் உணர்ச்சி உறுப்புக்களைத் தூண்டிக் கவனிக்குமாறு செய்கிறது. ஆனால், இங்கு ஒருவிதத் துன்பமுமில்லை. நம்மை ஆர்வப்படுத்துகின்ற காரியங்களைத்தான் நாம் முதலில் கவனிக்கிறோம் என்பது இங்கு ஒரு முக்கியமான அம்சம். இது நமக்கு நடைமுறையில் முக்கியமானதாகும். ஏனெனில், உண்மையாக ஆர்வம் தரக்கூடிய எவற்றைக் கற்க வேண்டுமென்றாலும் அல்லது கட்டயாமாகப் பயிற்சி பெறவோ அல்லது கற்கவோ வேண்டுமென்றாலும் உட்புறமாகவோ அல்லது வெளிப்புறமாகவோ ஒரு ஈடுபாட்டை வளர்த்தல் முக்கியமானது. ஆரம்பநிலை ஆர்வமற்றதாகவோ அதிக உழைப்பைத் தேவைப்படுத்துவதாகவோ இருக்கலாம். நாம் வேலையில் முன்னேறும் எண்ணமும் நம்முள் ஆர்வமும் உண்டாக்கப்படுகிறது. இந்நிலையிலேதான் தன்னிச்சையான ஆர்வமும் உண்டாகிறது. சரியான திறமையுடனும், சுருக்கமாகவும் கற்கக் கூடிய வழி முறைகளைப்பற்றி விரிவாகப் பின்னர் ஆராய்வோம்.

# 24

## கவனித்தலும் அதன் குணங்களும்

கவனித்தல் என்பது புரிந்துகொள்ளவேண்டிய வினவுகளைத் தரும் முறைக்குத் தயார்செய்யும் நிலை. இதுபொருளின் அமைப்பைப் பற்றிய அறிவைக் கொடுப்பதோடு நில்லாமல் சூழ்நிலைக்கேற்ப நம்மை வெளியிடங்களில் நடந்துகொள்ளச் செய்கிறது. இம்முறை அறியும் சக்தி எவ்வாறு நம்மைப் பொருளை அறியச் செய்கிறது; உளவியலிலும் செயல்முறையின் மிகமுக்கியமான அம்சமாகிறது. நமக்கென்று ஒதுக்கப்பட்ட காலம் முடியும்வரையில் இந்த உலகில் நாம் வாழ்கிறோம். நம்மில் பலர் பரம்பரை வாழ்வையும் வாழ்ந்து எதிர்த்துப்போராடும் வாழ்க்கையும் வாழ்ந்து வேறு சில முக்கியத் துவம் பெறுபவர்களாகவும், மற்றும் சிலர் உலகத்தின் பாதுகாவலர் களாக வரும் சந்ததியினரால் நினைவில் வைக்கப்படுபவர் களாகவும் ஆவர். எப்படியிருப்பினும் நாம் எல்லோரும் நம் சுற்றுப் புற நடவடிக்கைகளில் பங்கு பெற்றவர்களாக இருப்பது நன்கு விளங்குகிறது. நம்மில் சிலர் மிகுந்த அறிவு உள்ளவர் களாகவும் பலர் உலகச் சூழலில் இங்கும் அங்குமாக அலைக்கப் படுகிறார்கள். நம் சூழ்நிலையை நாம் எவ்வாறு புரிந்துகொள்வது? வாழ்க்கையை வெற்றிகரமாக ஆக்க ஒருவருக்கொருவர் எவ்வாறு விட்டுக்கொடுத்து வாழ முடியும் என்பதைத் தெரிந்துகொள்வது நம் மிடமிருந்து சமூகம் எதை எதிர்பார்க்கிறது என்பதையும் நம்முடைய திறமை வரையறைகளையும் எவ்வாறு அறிய முடியும்? இந்த அடிப் படையில் மனிதனுடைய நடத்தையைக் கூறும் அறிவியலாகிய மன இயலின் சூழ்நிலையோடு சம்பந்தப்பட்டு முக்கியமான கருத்துக்களை நமக்குக் கற்றுக் கொடுக்கிறது. புலன் உறுப்புகள்தான் நமக்கு வெளி உலகத்தினுடைய அறிவைக் கொடுக்கின்றன என்பது எல்லோராலும் நினைக்கப்பட்ட உண்மை. உண்மையில் புலன்கள் நமக்கு உணர்ச்சியைத்தான் கொடுக்கின்றனவே தவிர, வெளி உலகத்தின் அறிவைக் கொடுப்பதில்லை. ஒரு வீட்டைப் பார்க்கும்படி நேரிட்டால் வீட்டிலிருந்து பிரதிபலிக்கும் ஒளிக் கிரணங்களால் அதை வீடு என்று அறிய நமது அளவியல் சொல்கிறது. இதைப்போல்தான் ஒலியை அறியும்போது காற்றில் உண்டாகும் ஓர் அலை அசைவு அல்லது அதிர்ச்சி சிறிது தூரத்தில் நாம் கப்பலைப் பார்க்கும்போது சாம்பல் நிறம் நம் கண் களுக்குத் தெரிந்தாலும் அதைக் கப்பல் என்று சொல்கிறோம். இந்த நிமிடத்தில் கப்பலினுடைய பல்வேறு அமைப்புகளும், குணங்களும் நம் உணர்ச்சிக்குப் புலனாவதில்லை. புரிந்துகொள்ளுதல் என்ற மனத்தினால் ஏற்படும் நிலைதான் இவ்வறிவைக் கொடுக்கிறது. இஃது எப்படி ஏற்படுகிறது என்பது நம் கருத்துக்குப் பொருந்தாத ஒன்று. உணர்ச்சிகள் என்பது ஒரு செயலற்றமுறை; அறிந்து

கொள்ளும் திறன் ஒரு செயல்முறை. உணர்ந்துகொள்ளும் திறன் மூலமாக ஒருவன் தன் சுற்றுப்புறத்தை அறிந்துக் கொள்ளவும் அதனுடன் ஒரு தொடர்பை ஏற்படுத்திக்கொள்ளவும் ஒரு ஈடுகட்டும் சாதகமாகிறது. சூழ்நிலையை எதிர்த்துச் செய்யும் செயலானது ஈடுகட்டும் முறையாகும். கடுங்குளிரில் நாம் கதகதப்பான உடைகள் அணிவதும் வெப்பமான காலத்தில் குளிர் பானங்களைப் பருகுதலும் அல்லது வெப்பக்காற்றைக் குளிர வைத்தலும் சாதாரணமானவை.

இம்மாதிரியான சந்தர்ப்பங்களில் நாம் முழுமையான ஒரு பொருளை அறிந்து கொள்ளாவிட்டாலும் அதில் ஒரு குறிப்பிட்ட பகுதியைப் புரிந்து கொள்கிறோம். இந்தப் பகுதிகள் நினைவுறுத்தும் குறிகளே உண்மையைப் புலப்படுத்தும் திறனை நமக்கு அளிக்கின்றன. பாம்புபோன்ற அசையும் பொருளைப் பார்க்கும்போது புலனும் அறிவானது அதனைப் பாம்பு என்று அறிவுறுத்துகிறது. அசைவுகளுடன்கூடிய ஒரு தெரிந்த குரல் ஒரு குறிப்பிட்ட மனிதன் இருப்பதை நமக்கு உணர்த்துகிறது. தூரத்தில் வரும் ரீங்கார ஒலியானது அருகில் வரவர அது விமானம் என்பதை நமக்கு அறிவிக்கிறது. ஒரு பழக்கப்பட்ட நறுமணமானது மல்லிகைப் பூக்கள் இருப்பதை நமக்குத் தெரிவிக்கிறது. இதே முறையில் முதலில் உட்காரும் குழந்தையானது சுற்றுப்புறப் பொருளைக் கொண்டு ஓர் உலகத்தை அமைத்துக் கொள்கிறது. தன்னைச் சுற்றியுள்ள பொருள்களின் தன்மையை அறிந்து கொண்டு பின்னர் அப்பொருள்களின் அடையாளங்களாகவோ, குறியாகவோ இக்குணங்களைப் பயன்படுத்த அறிந்து கொள்கிறது. நான்கு வயதுச் சிறுவன் ஒரு மோட்டார் வண்டியையும், மோட்டார் சைக்கிளையும் எந்திரத்திலிருந்து உண்டாகும் ஒலியைக்கொண்டு வேறுபடுத்தி அறிந்து கொள்கிறன்; ஒரு சிறுவன் தன் தந்தை கோபமாக இருக்கிறர் என்பதை அவர் முகத்தின் கொடூரப் பார்வையிலிருந்து தெரிந்து கொள்கிறன். அச்சிறுவன் இதற்கேற்பத் தன் நடத்தையை மாற்றிக் கொள்கிறன். அநேக உதாரணங்கள் இவைபோல் இதனை விளக்கக் கொடுக்க முடியும். இரவில் எல்லா விளக்குகளும் அணைந்தபிறகு ஏற்படும் நடையோசை, அதைத் திருடன் என்று உணர்ந்து கொள்ளச் செய்கிறது.

## சமூகக் கண்ணேட்டம்

சமுதாயத்தில் காணப்படும் அடையாளங்களையும் பொருள்களையும் விளக்குவதில் இது அடங்கியுள்ளது. மற்ற மக்களின் எண்ணங்களையும், நோக்கங்களையும் உண்மை உள்ளத்தையும், புத்திசாலித் தனத்தையும், மற்றக்குணங்களையும் நாம்

கவனிக்கிறோம். இந்தக் குணங்கள் யாவும் மொத்தமாக நோக்கா விட்டாலும் ஓரளவுக்கு நம் நினைப்பையும், குறிப்பையும், சைகைகளையும் நம்முடைய அறிவினாலும் அனுபவத்தினாலும் நாம் கவனித்துக் கொள்கிறோம். இவ்வாறாக, ஈரப்பதத்தைக் கண்ணினாலும், அங்கில்லாத மலரை அதன் மணத்தாலும் புரிந்து கொள்கிறோம். இதேபோல்தான் நாம் மற்றவர்களிடம் உள்ள கோபத்தையும், வெறுப்பையும், அசதியையும் அறிந்து கொள்கிறோம். கோபம் அல்லது மகிழ்ச்சியின் மொத்த நிலையானது ஒரு சிக்கலான உணர்வாகும். இது சிக்கலான உண்மையிலுள்ள தனிச் செயல். கோபம், மன உணர்வுகளுக்கு அறிகுறியாகிறது. விளக்கங்கள் ஒரு தனிமனிதனின் அனுபவத்தினால் உருவாக்கப்படுகின்றன. சில சமயங்களில் இவை தவறுதலாகலாம். அது அபூர்வமானது. ஒரு குழந்தையானது தன் குழந்தைப் பருவத்திலிருந்து தன் குடும்பத்தாரிடமிருந்து அல்லது மற்றவர்களிடமிருந்து இக் குறிப்புக்களின் பொருள்களைக் கற்றுக்கொள்கிறது.

## கவனித்தலும் கூர்ந்து நோக்குதலும்

இது மிக முக்கியமான செயல்முறைத் தலைப்பாக இருந்தாலும். பொதுப்படையான கருத்துக்கள் மட்டுமே கூர்ந்து நோக்கும் தன்மையைக் கொடுக்க முடியும். வெளிப்படையாக நோக்கினால் கவனமின்மை என்று எதுவும் கிடையாது என்பதை நாம் குறித்தல் வேண்டும். மற்றவற்றின்மீது கவனமின்மையென்பது மனிதன் தான் எதைக் கவனிக்க வேண்டுமென்று நாம் எதிர்பார்க்கிறோமோ அதில் அவனுக்கு அதிக நாட்டமின்மையே மற்றவற்றின் மீதும் உள்ளது என்பதைக் குறிக்கும். அவனது கவனம் வேறு பொருள்களின் மீது செல்கிறது. ஆர்வம் என்னும் முக்கியமான காரணம் நம் கவனத்தை நிலைநிறுத்திக் கொள்வதற்கு மிகமுக்கியமானது. உதாரணமாக ஒரு மாணவன் தான் கற்றுக் கொண்டிருப்பதில் ஆர்வம் உடையவனானால் அதனால் அவனுக்குப் பலன் உண்டு. பல சமயங்களில் வயதானவர் ஒருவர் தமக்கு ஆர்வம் இல்லாத செயல்களில் கவனத்தைச் செலுத்த வேண்டியதாகிறது. அவர் இம்மாதிரியானவற்றில் நாட்டத்தை வளர்த்துக்கொள்ள வேண்டும். இது, கவனிக்கப் படக்கூடிய பொருள்களின் கவர்ச்சிமிக்க தன்மையினை அடிப்படையாகக் கொண்டிருக்காததாக இருக்கலாம். அதில் தேர்ச்சி பெற்றால் தனக்கு ஓர் உயர்வு கிடைக்கும் என்ற காரணத்தால், அந்த ஆவல் தூண்டப்பட்டிருக்கலாம். ஒரு செயலைக் கவனிப்பதற்கு சுய ஆர்வத்தைத் தூண்டக்கூடிய தீவிரமான காரணம் போதுமானது. செயலில் விரும்பத்தக்க முடிவினை ஏற்படுத்தும் தன்மை இருந்தால்தான் அதில் தீவிரமான கவனம் செலுத்த முடியும். ஒரு புது மொழியைக் கற்றுக்கொள்வது

களைப்பூட்டும் காரியம். ஆனால், அது பண லாபத்தை அடைவதாக இருந்தால் அது மனிதனை இணக்கமான புத்தியுடன் கவனிக்க ஊக்குவிக்கிறது. வேலையின் முடிவை அவனுடைய தன்மானத்திற்கு ஒரு சவாலாக எடுத்துக் கொண்டு அந்தச் செயலை மனப்பூர்வமாகக் கவனிக்க முற்படுகிறான். பிறகு ஒருமுகப் போக்கு பெறப்படுகிறது. சூழ்நிலையானது புதியதாகவும், கவனம் தன்னிச்சைச் செயலாகவும் ஏற்படுவதால், முதலில் சில நாள்களில் கவனித்தல் சுலபமாகிறது என்ற உண்மையின் அடிப்படையில் நம் வேலைகளைச் சிறப்பாகச் செய்வதில்லை. இதில் சில வழக்கமான துன்பங்கள் அடங்கியுள்ளன. சில நாள்களில் அவ்வேலை துன்பமாக இருக்கும்; மந்த நிலையையும் அடைகிறது. ஏனெனில், அவன் கவனிப்பதிலுள்ள துன்பங்களைக் காண்கிறான். காரணம் உள்ளங்களில் அந்தப் பொருள் அவனுக்குத் தெரிந்ததாகவும், பழக்கப்பட்டதாகவும் மாறிவிடுகிறது. இதில் மிகப்பெரிய தவறு என்னவென்றால் இவ்வேலையைத் தொடர்ந்து உறுதியுடன் சில காலம் செய்துவந்தால், உண்மையான ஆர்வமாக மாறிப் பின்னர்த் துன்பமில்லாததாக ஆகிறது. உளவியல் வல்லுநர்கள் இதைப் பற்றி அழுத்தமாகக் கூறுகிறார்கள்.

சில மனிதர்கள் ஏன் கவனித்தலில் குறையுடையவர்களாக இருக்கிறார்கள்? இதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. சிலர் புதுவிதமான எண்ணங்களையும், திட்டங்களையும் பார்க்க மறுக்கிறார்கள். இந்த மனித மனத்தினது ஸ்திரத் தன்மையானது அவர்களைச் சுற்றுப்புற விவகாரங்களை ஆராய முடியாமல் தடுக்கிறது. சிலர் பெருமிதத்துடன் தமக்கு எல்லாத்துறையிலும் தெளிவான கருத்துக்கள் இருக்கின்றன என்றும், அதிலிருந்து தம் மனம் உருவாக்கப்படுகிறதென்றும் உறுதியாகக் கூறுகிறார்கள். இது பிரச்னையைத் தவறானமுறையில் அணுகுவதற்கு, இந்தக் குறுகிய எண்ணமானது புதுவித உண்மைகளை அறிந்து கொள்வதைத் தடை செய்யும். இரண்டாவதாக ஆய்ந்தறிதலில் எவரும் தவறான அபிப்பிராயம் வைத்திருக்கக் கூடாது. ஏனெனில், அத்தகைய மனிதன் தன்னுடைய தவறான அபிப்பிராயத்திற்குப் பொருத்தமானவற்றை மட்டும் காண்கிறான். ஆக அரசியல் கட்சிக்கு எதிரான இயற்கை விரோதம் ஒருவன் வைத்திருந்தால் அவன் தன்னுடைய குறைகளையும் தவறுகளையும் பற்றிப் பார்க்க விரும்பவானேயொழிய, அதன் நல்ல தன்மைகளைப் பார்க்க மாட்டான். எனவே, அவன் நோக்கத்தில் ஒரு வளைந்து கொடுக்கும் தன்மை இருக்கவேண்டும். இதுவே, ஒரு செயலிலுள்ள முறையான எல்லா உண்மைகளையும் அறியத்தகுதி உள்ளதாக இருக்கிறது. இதுவே மிக முக்கியமாகும்.

அத்தியாயம் – 2

# சூழ்நிலைக்குப் பொருத்தமுடைய சிந்தனை சக்தியின் இடம்

## சிந்தனையும் அதன் தன்மைகளும்

வெளி உலகத்தைப்பற்றி அறிவைக் கொடுப்பதில் அடுத்த கருவியாக நமக்கு இருப்பது நம் சிந்தனைத் திறனே. சூழ்நிலையைக் கையாளுவதில் சிந்தனையின் முக்கியத்துவத்தை அதிகமாக அளவிட முடியாது. நற் சிந்தனையாளராக வருவதற்கு என்ன செய்ய வேண்டும், என்பதற்கு முன் சிந்தனையின் முக்கிய குணங்களை இங்குப் பார்ப்போம். சிந்தனை என்பது, உடலின் செயல்களுக்கு மாருக, கருத்துக்களைப் பயன்படுத்திச் செய்யப்படும் மனத்தின் செயலாகும். மனிதனின் சிந்தனைக் கருவி கருத்தாகும். சதுரங்க விளையாட்டைப்போலச் சில மனிதர்கள் சில சமயங்களில் கருத்துக்களின் உதவியின்றிச் சிந்திக்கலாம். இதைப்போல ஒரு சில சமயங்களைத் தவிர பொது அறிவினுலும், அனுபவங்களாலும் பெறப்பட்ட கருத்துக்களை உபயோகிக்கிருர்கள். நம் கருத்துக்களைப் பரிமாறிக்கொள்ளும்போது சூழ்நிலையின் அறிவு நமக்கு நன்கு புலனுகிறது. இதனுல் மொழிக்கும் சிந்தனைக்கும் ஒரு நெருங்கிய தொடர்பு இருந்தாலும், மொழியில் திறமையான ஒருவன் சிந்தனையிலும் திறமையானவனுக இருக்கமுடியாது. 'உட்வொர்த் தன்னுடைய மனவியலில் கூறியபடி மனித இனத்தின் மேலான நிலைமிருக உலகத்தினின்று பல கோணங்களில் குறிப்பிடத்தக்கதாக உள்ளது. புரிந்து கொள்ளும் சக்தியைவிட அதிகமாக — குறிப்பாக இல்லை. 'மனிதன்' ஒரு தெளிவான சிந்தனையாளன். மேஜையின் மேல் சாய்ந்து ஒரு பென்சிலையும் தாளையும் வைத்துக்கொண்டு, செய்யும் செயல் அல்லது மேஜையின் மீது காலைப் போட்டுக் கொண்டு இருந்தாலும், அவன் தன் உட்செயலில் உயிரோட்டத்துடன் இருந்து அவன் சிந்தனை ஒரு பெரிய சாதனையைப் பெறத் தீவிரமான ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருக்கிறது. மனிதன் சிந்தனையாளனேடு செயல் புரிபவனும்கூட. அவன் தன் சூழ்நிலையைக் கொண்டு அதை மாற்ற விரும்புகிருன். அவன் பெரிய துணிகரச் செயலில் ஈடுபடுத்திக் கொண்டு நல்ல முடிவுகளை நிறைவேற்றுகிருன். நாம் வீண் பொழுது போக்கும் நேரங்களில் நமக்கு முக்கிய கருத்து இருந்தும் அவை ஒரு பொருளிலிருந்து மற்றவற்றிற்கு ஒழுங்கற்ற நிலையில் மாறிக்கொண்டிருக்கிறது. கருத்துக்கள் இங்கு இருந்தாலும் இதை நாம் சிந்தனை என்று கருத முடியாது. சுயேச்சையான இணக்கம் என்ற போக்கும் இதே போன்றது. இங்கு ஒரு கருத்திலிருந்து மற்ருெரு கருத்து பிறக்கிறது. இதனுல் ஒரு கருத்துக்கும் மற்றதற்கும் தெளிவான இணக்கம் இல்லாததால்

இது கட்டுப்பாடற்ற கருத்து என்று அழைக்கப்படுகிறது. இதில் இணைப்பு ஏதும் இல்லை என்று கூற முடியாது. ஏனெனில், நம்முடைய சுபாவத்தோடும், மனநிலையோடும் பொருந்தி இருப்பதால் இப்படிப்பட்ட இணைப்பை அறியமுடியாது. நம் கையிலுள்ள பிரச்னையின் தன்மையைப் பொறுத்து, நம் கருத்துக்கள் ஒழுங்குப் படுத்தப்படுகின்றன. சிந்தனையாளராகும்போது நாம் கருத்துக்களை விரிவாக அறிந்து பல முறைகளில் மாற்றிக் கடைசியில் ஒரு முடிவைப் பெறுகிறோம். இதற்குச் சில உதாரணங்களாக, குறுக்கெழுத்துப் போட்டி, வாக்கிய அமைப்பு அல்லது சில வார்த்தைகளைப் பூர்த்தி செய்தல் ஆகியவைகளை எடுத்துக் கொள்ளலாம்.

சிந்தனையின் குறிப்புகள் ஒன்றாக எடுத்துக்கொள்ளப்பட்டு அதனை ஒன்றோடு ஒன்று இணைத்துப் பார்த்தால் ஒரு இறுதி முடிவு திடீரென்று மின்னலைப் போன்று கிடைக்கிறது. சார்பான எல்லாக் கருத்துக்களையும் ஒன்றாக்கி, பிறவற்றோடு சம்பந்தத்தையும் குறித்தால் நாம் சரியான ஒரு முடிவைப் பெறுகிறோம். இந்த முறையே அனுமானம் ஆகும். அறியக்கூடிய முடிவு என்பதைச் சிந்தனையின் போக்கோடு உள்ள இருவிதக் கருத்துக்களிலிருந்து குறிப்போடு சேர்ந்துள்ள-ஆனால், அதே மாதிரியான மூன்றாவது கருத்தை வரவழைக்கும். பின்வரும் உதாரணம் முடிவுக்குச் சிறந்த ஒன்று. எல்லா நல்ல மனிதர்களும் துன்பத்திலுள்ளவர்களுக்கு உதவுகிறார்கள். என் நண்பன் நல்லவன். ஆகையால் அந்நண்பன் துன்பத்திலுள்ளவர்களுக்கு உதவுகிறான். இந்தவகைச் சிந்தனையை தர்க்கவியல் அறிஞர்கள் அனுமானிக்கக் கூடியது என அழைக்கிறார்கள். ஒரு குறிப்பிட்ட அல்லது பல நிகழ்ச்சிகளோடு நாம் படிக்கும் பொதுவான விதிகள் மற்ற முடிவாலும் இது வேறுவிதமான அனுமானமாகும். மழைக்கு முன்புள்ள கருமேகங்களை கவனித்து, மழை வருவதற்குக் கருமேகங்கள் காரணமாகின்றன என்று ஒருவன் முடிவுக்கு வருகிறான். ஆனால், வாழ்க்கையில் இந்த இரண்டு போக்குகளும் ஒன்றாக இணைந்து நமக்கு மற்ற விசித்திரமான முடிவுகளைக் கொடுக்கின்றன. இவ்விருவகை முறைகளைப் பின்பற்றியே கடந்த சில நூற்றாண்டுகளாகக் கண்டுபிடிக்கப்பட்ட அறிவியல் கண்டு பிடிப்புகள் நிகழ்ந்துள்ள ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டதாகவோ அல்லது சம்பந்தப்படாததாகவோ அல்லது பெறப்பட்டதாகவோ அல்லது தூண்டப்பட்டதாகவோ உள்ள பிற சிந்தனைகளும் உள்ளன. தற்காலத் தர்க்கவியல், கணித சாஸ்திரத்தில் குறியீட்டு வாக்கியங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து அவற்றினால் ஒரு முடிவை அடைய உபயோகப்படுகிறது. இம்மாதிரி

யான யூகங்களின் விரிவுகளுக்கு நாம் இப்போது செல்லத் தேவை யில்லை. ஏனெனில், ஒரு மனிதன் தன் வாழ்வின் சூழலுக்குத் தன்னைத் திருப்திகரமாக அமைத்துக்கொள்ளத் தன் சிந்தனா சக்தியை எவ்விதத்தில் உபயோகித்துக் கொள்கிறான் என்பதே நமது முயற்சியாகும்.

## *சிந்தனா சக்தியை எவ்வாறு வளர்ப்பது ?*

இந்த கேள்விக்குப் பதிலளிப்பதைவிடக் கேட்பது எளிதாக இருக்கிறது சிந்தனைத் திறனானது, அறிவைப் போன்றது. அது நம்முள்ளேயே இருக்கிறது. ஆனால், அதை நாம் உயர்த்தவோ, குறைத்துக் கொள்ளவோ எந்த அளவிலும் முடியாது. இது முக்கிய மான கேள்வியானாலும் இந்தக் கேள்விக்குச் சரியான பதிலை அளிக்காவிட்டாலும் சில குறிப்புக்களை நாம் கவனிக்கலாம். நம்மில் பலர் நம்முடைய ஞாபகசக்தியைப் பற்றி அடிக்கடி கவலைக்கொண்டு அதை உயர்த்திக் கொள்ள சாதனையைத் தேடுகிறோம். ஆனால் ஞாபகப்படுத்திக் கொள்ளும் திறமையை நாம் அடைய முடியாது. ஆகையால், அதை நேரடியாக உயர்த்திக் கொள்ள முடிவதில்லை. ஆனால், இது ஞாபகத்திற்காக நல்ல முறைகளை ஏற்படுத்திக் கொள்ள முடியும். அதேபோல் சிந்தனைப் போக்கின் மைய பாகத்தை வளர்க்க முடிவதில்லை. நல்ல தூண்டுதல் இல்லாமல் சிறந்த கவியை எழுதமுடியாத ஒரு கவிஞனின் நிலைக்கு இதை ஒப்பிடலாம். இந்த உள்ளுணர்வை எவ்வாறு அடைவது என்ற கேள்விக்குப் பதில் அளிக்கமுடியாது. எனவே, சிந்தனையாளரின் தவறான நடத்தையும் எதிர்மாறானதாக அமையும். இப்பிரச்னைக்குத் தொடர்புடைய பொருளைப்பற்றிய தெளிவான அறிவைப் பெற்றிருக்க வேண்டும் என்பது சொல்லாமலேயே விளங்கும். ஒரு மனிதன் கருத்துக்களைக் குறைவாகக் கொண்டிருந்தால் அவனை மிக மோச மான சிந்தனையாளன் என்கிறோம். இவ்விஷயங்களைப்பற்றி ஆழ்ந்து யோசித்தால் அது முடிவில் சரியாகவோ அல்லது சரி இல்லாததான விளக்கத்தை உடைய கொள்கையாகவோ அமையலாம். தெளிவான சிந்தனையின் முதல் கட்டம் என்னவென்றால்- கருத்துக்கள் போது மானவையாக இல்லாதிருந்தால், போதுமான கருத்துக்களைப் பெற்றிட வேண்டும். இரண்டாவதாக எல்லா நிபந்தனைகளும் உண்மையிலேயே இப்பிரச்னைக்குத் தீர்வு காணப் பொருத்தமா என்று அறிதல் வேண்டும். சில பொருந்தாத மேலோட்ட மான உண்மையைச் சிந்தனையாளரின் ஒரு சரியான தீர்வைக் காண்பதில் ஏற்படுத்தும். சில நேரங்களில் சில பிரிவுகள் பொருந்தாத அறிவுள்ளதாக இருப்பதால் தவறான கருத்தைக்

கொடுக்கும். சில காரியங்களில் நாம் தவறான கருத்துக்களை வைத்திருப்பது ஒரு பொதுவான உண்மை. ஆகவே, இவ்வெண்ணங்களின் உண்மையை நாம் கண்டறிவது அவசியமாகிறது. அறிவியல் உண்மையைக் கண்டுபிடித்தலில் கூட, விஞ்ஞானி பல முறைகளில் தடை செய்யும் நினைவுகளைத் தூக்கி எறிய வேண்டியிருக்கிறது. தவறான சிந்தனைக்கு நல்ல மாற்று மருந்தாக அமைவது மற்றவர்கள் தங்களின் சிந்தனையில் செய்த தவறுகளை உன்னிப்பாகக் குறித்தலே ஆகும். முறையான - முறையற்றதாக விவாதிக்கப்பட்ட தவறான வாதங்களை ஒழுங்காகப் படிப்போமேயானால் மனிதர்கள் எங்குத் தவறு செய்கிறார்கள் என்பதை அறியலாம். நம்மையும் தவறு செய்வதிலிருந்து தடுக்கலாம். இம்முறையில் முக்கியத்துவமானது மிகைப்படுத்திக் கூற இயலாது. நம்மில் பலர் நம் அறிவுக் களஞ்சியத்தில் இருந்து சிந்தையற்றவர்களாகவும் உணர்வற்று மற்றவர் மீது துவேஷத்தையும், வெறுப்பையும் காட்டுகிறோம். இது நடுநிலையான காரியத்தை கவனிப்பதிலிருந்து நம்மைத்தடுக்கிறது. இந்தத் தவறான அபிப்பிராயங்கள் யாவும் விலக்கப்பட்டு உண்மையில் உறுதி என்ற கொள்கை உடையவராவதே நம் குறிக்கோளாக இருக்கவேண்டும். தவறான சிந்தனைக்கு முக்கியமான காரணம் நாம் சொற்களுக்கும் கடினமான சொற்றொடர்களுக்கும் அடிமையாய் இருப்பதே ஆகும். சொற்கள் நல்ல கவிதைகளைப் போல அழகைக் கொடுக்கின்றன. அவை ஒரு நிகழ்ச்சியின் உண்மையினைக் கண்டு பிடிப்பதில் நமைக் குருடாக்கிவிடக்கூடாது. பழமையான புகழ்மிக்க தொடர்களைப் பல மக்கள் பயன்படுத்தி விவாதங்களில் தாம் கூறுவதே சரியென விவாதிக்கிறார்கள். ஒரு பாதி உண்மையென்பது மறுக்கவோ அல்லது ஒப்புக்கொள்ளவோ கடினமானது என்று பல முறை கூறப்பட்டுள்ளது. சில சமயங்களில் மட்டும் உண்மையாகவுள்ள கருத்துக்கள் மொத்த நிகழ்ச்சிகளுக்கும் உண்மையான தவறாக எடுத்துக் கொள்ளப்படுகின்றன. இது போன்ற தர்கத்திற்கு மாணவனுக்கு உதாரணம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

நான் இவ்வுலகில் வாழ்ந்து கொண்டிருக்கும்போது 'உலகே மாயம்' என்று வேதாந்தத்தில் கூறப்பட்ட கருத்தை ஒருவன் எவ்வாறு ஒப்புக்கொள்ள முடியும்? இப்படிப்பட்ட வார்த்தைகள், தொடர்கள் அற்ப சிந்தனையை மறைக்கின்றன.

## அத்தியாயம்-3

# மனத் திண்மையை வளர்த்தல்

### விருப்பம் எதைக்குறிக்கிறது?

மனிதன் தன் சூழ்நிலையைத் தெரிந்துகொண்டு அதற்கேற்பத் தன்னை அனுமானித்துக் கொள்கிறான். ஆனால், தன்னுடைய செய்கையின் மூலம் தன் அறிவைச் சிறந்த முறையில் செயல்படுத்த வேண்டும். நம் தீர்மானத்தை சிறிய காரியங்களில் நாம் துன்பம் இல்லாமல் உபயோகிக்கும்போது அதிகமான தியாகமும், முயற்சியும் தேவைப்படும். துன்பமான கடமைகளை எடுத்துக்கொள்ளும்பொழுது சஞ்சலமும் உண்டாகும். முடிவற்ற நிலையையும் சந்திக்க நேரிடும். கணிசமான மனத்திட்பம் இம்மாதிரி சமயங்களில் தேவை. ஆனால், நம்மில் பலருக்கு இது சாத்தியமில்லை. சில மக்கள் மனத்திட்பமே இல்லாதவர்களாக இருப்பதால், சிறு வேலைகளில்கூட அவர்கள் கணிசமான துன்பங்களை அனுபவிக்கின்றனர். சஞ்சலமின்மை, முடிவெடுக்காத நிலை, சில காரியங்களை அப்படியே விட்டுவைத்தல் செயலற்ற நிலையாகி விடுகிறது, மனத்திட்பம் இல்லாத சில மனிதர்களின் குண நலன்கள் உள்ளன. சில பழைமையான காரியங்களில் ஒரு செயலைச் செய்ய வேண்டும், என்ற எண்ணமே, அவனைக் கலவரப்படுத்தவும், உணர்ச்சிவயப்பட்டவனுக்கவும் போதுமானதாகிறது. வழக்கமான நிகழ்ச்சிகளுக்கு நம்மைக் கட்டுப்படுத்திக்கொண்டு பொதுவானமுறையில் விருப்பம் என்பது என்ன ? அது எவ்வாறு நன்முறையில் வளர்க்கப்படும் என்பதை விளக்கலாம்.

ஒரு மனிதன் ஒரு தொடர்ந்த நிகழ்ச்சியினைப் பழக்கமாகத் தீர்மானித்து, எவ்வித நிபந்தனையுமின்றி அதைத் தொடர்ந்து செய்யக் கூடுமானால், அவன் மனத்திட்பம் உடையவன் எனலாம். விருப்பம் என்ற சொல் ஒரு பொருளைக் குறிப்பதில்லை. ஆனால் செயல்முறையைக் குறிக்கிறது. ஒரு மனிதனோடு விருப்பம் என்ற பதத்தை சேர்த்தால், அவன் ஒரு திடமானத் தீர்க்க அறிவோடும். எண்ணத்தோடும் ஆனால் ஒரு முடிவையும் பெறச் செயலில் ஈடுபடுகின்றான் என்பது பொருள். நம் செயல்களில் ஏதாவது காரணங்களால் தடை ஏற்பட்டால் நாம் தீர்மானத்தைப் பிரயோகிக்கிறோம். சில மனிதர்கள் இந்த நிலையில் தீர்மானத்தை விட்டு விடுகிறார்கள். இன்னும் சிலர் திட சித்தம் உள்ள தடைகளைத் தாண்டித் தங்கள் காரியம் முடியும்வரை கடினமாக உழைக்கிறார்கள்.

நம்மில் சிலர் அதிகப்படியான முயற்சியைப் பெற்று இந்தத் தடங்கலை எதிர்க்கிறோம். மற்றவர்கள் எதிர்த்துச் செயல்பட எவ்வித முயற்சியும் எடுக்காமல் விலகிவிடுகின்றனர். தீர்மானம் எதைப் பொறுத்திருக்கிறது என்பது மக்கள் தீர்மானம் இல்லாமல் இருத்தல் என்பதோடு ஒப்பிட்டுப் பார்ப்போமானால் நன்கு தெளிவாகும். இந் நிலையானது வேலை செய்வதில் அபரிமிதமான ஆர்வமின்மையைக் குறிக்கிறது. ஒரு மனிதன் களைப்படைந்த பொழுது பாராட்டும் சுகமான சோம்பல் என்ற நிலை அல்ல இது. தீர்மானம் இல்லாமக்கள் பகல் கனவு காண்பவர்களாகவும், தைரியமில்லாதவர்களாவும் இருக்கிறார்கள். இவர்களுக்குத் தாழ்வு மனப்பான்மையும், ஏளன உணர்ச்சியும் இருக்கிறது. சாதாரண மனிதர்கள் இத்தகைய சாதாரண நிலைக்கு உபயோகிக்கிறார்கள். ஆனால், இவை மிகவும் அபூர்வமானவை. தீர்மானக்குறைவுக்கான காரணங்கள் யாவை? இது அதிக முயற்சியை எதிர் பார்த்தபோதிலும் அவன் கருத்தைத் தன் காரியத்தின் முடிவை நோக்கித் தவறவிடுகிறான் அதிகமான ஒப்பனையை செய்யப்பட்ட நிலையை என்பதற்கு எதிரான, குறைவான மனக்குழப்பமுடைய நிலையைத் தீர்மானமின்மை என்று உளவியல் அறிஞர்கள் கூறுகிறார்கள். நிலைமைக்கு எதிரானதாக மனிதன் அதிகமாகப் பயந்து அதன் பயனாக செயலில் தன்னைப் பாதுகாத்துக் கொள்கிறான் என்று மற்றவர்கள் கூறுகிறார்கள். அவன் செயல்களில் அதிகம் பயப்படுவதால் ஒன்றும் செய்யாதிருக்கிறான். மற்றவர்கள் இதை உணர்வற்ற தன்மையில் இயங்குகின்ற ஒடுக்கப்பட்ட விளக்கங்களுக்காக முடக்கப்பட்ட விளைவு என்று சிலர் கூறுகின்றனர்.

## *தீர்மானம் எப்போது உறுதிப்படுத்தப்படுகிறது?*

தீர்மானம் எந்த சமயங்களில் தானாகவே தன்னை உறுதி செய்கிறது. ஒரு முக்கியமான பங்கானது நம் நோக்கங்களின் போராட்டமேதான். இப் போட்டி எப்படி ஏற்படுகின்றது? மனிதன் பலவிதமான தன்மைகளைக் கொண்டவன் என்பதை நாம் உணர்ந்து கொள்ளவேண்டும். அவனுக்குப் பலவிதமான திறமைகளும், உடல் தேவைகளும், விருப்புகளும், பழக்க வழக்கங்களும் உள்ளன. பலவிதமான செயல்களைச் செய்யும்போது மனிதனுடைய சூழ்நிலையும் பலவிதமாக உள்ளது. பலவிதச் செயல்களுக்கிடையே தான் கருத்து வேறுபாடுகள் ஏற்படுகின்றன. ஒவ்வொன்றும் தேவை போல் தோன்றுகிறது. இந்தச் சூழலில் போராட்டமானது தோன்றுகிறது. இரண்டு மாற்றங்களும் பார்ப்பதற்குத் தேவை போல்

தோன்றும். ஆனால், ஒன்று மற்றதன் வழியாய் வரும்போது, ஒரு போராட்டத்தை நாம் தீர்க்க வேண்டியுள்ளது. இன்பம் தராத தீர்மானமின்மை என்பது, தயக்கத்திற்கும், அலைபாயும் தன்மைக்கும் வழிவிடுகிறது. இதுதான் முதல் விளைவாகும். ஒரு மாணவன் தனக்கு விருப்பமுள்ள மொழியில் தன்னைச் சிறப்புறச் செய்ய அவன் முற்படலாம். ஆனால் மொழியானது ஒரு வருமானம் தரக்கூடியது என்பதால், அவன் தனக்கு விருப்பமில்லாத வேறு பாடத்தை எடுத்துக் கொள்ள வற்புறுத்தப்படுகிறான். ஏனெனில் அது அவனுக்கு ஒரு வேலை தரும். இப்போராட்டத்தைத் தர்க்க ரீதியாக சமரசப் படுத்த வேண்டுமானால், நன்மை தீமைகளை ஒவ்வொன்றாக அலசிப்பார்த்து அவற்றின் அடிப்படையில் ஒரு தீர்மானத்திற்கு வரவேண்டும். இன்பம் தாராத தீர்மானமின்மை என்பது, தயக்கத்திற்கும், கவலையடையும் தன்மைக்கும் வழிவகுக்கிறது. இது தான் முதல் விளைவாகும். பல நிலைகளில் நேரமின்மையால் மாற்றங்களில் ஏதாவது ஒன்று உள்ளார்வத்தை இழந்து மற்றது செயலில் முடிவாக மாறுகிறது. தனிமனிதன் விரும்பத்தகாத இந்த முடிவில்லாத நிலைகளில் களைப்படைந்து தன்னிச்சையாக ஒரு முடிவின்றித் தேர்ந்தெடுத்து, மற்றதை விலக்கிவிடுகிறான். இச் சிக்கலை முடிக்க எடுத்த முடிவுதான் கடைசிவரை நிலைத்து நிற்கிறது. நாம் நம்முடைய தீர்மானத்தை மற்ற வழிகளிலும் பயன் படுத்த வேண்டும். நாம் தேர்ந்தெடுத்த நம்முடைய தீர்மானத்தை மற்ற வழிகளிலும் பயன்படுத்த வேண்டும். ஒருவன் தேர்ந்தெடுத்த நோக்கமானது தூரத்திலிருந்தாலும், அதில் அவன் நாட்டத்தை இழந்து தன் தீர்மானத்தை நிறைவேற்றுவதில் துன்பத்தைக் காண்கிறான். இளங்கலைத் தேர்வில் தேறிய மாணவன் முதுகலையைத் தனியாகப் பயில முற்படுவான். இங்கு அவன் நோக்கமானது சிறிது தூரத்திலிருப்பதற்காகத் தனிப் படிப்பில் இறங்கிய முயற்சி பயமுறுத்தக்கூடியது. இதனால் அவன் ஒன்றும் செய்ய முடியாமல் தன் நேரத்தை வீணாக்குவான், இந்த மாதிரியான சமயங்களை வெகு தொலைவில் நோக்கம் கொள்வதை இறுதியாகக் கொண்டு சிறிய, ஆனால் நிச்சயமான முடிவை வகுக்க வேண்டும். சிறிய முடிவானது தெளிவாகவும், சுருக்கமாகவும் இருக்கலாம். இதற்கு நாம் உதாரணத்தைத் தரலாம். படிப்பதற்கு பல புத்தகங்கள் ஒதுக்கப்படுகின்றன. ஆனால், எதைமுதலில் படிப்பதென்று மாணவனுக்குத் தெரியவில்லை. இதனால் படிப்பதைத் தள்ளிவைத்துக் கொண்டே போகிறான். இதில் நேரத்தை வீணாக்குவதைவிடப் பல புத்தகங்களை ஒன்றை எடுத்து படித்தானானால் அஃது அவனுக்கு பலன் தரும்.

நிகழ்ச்சிகள் சாதாரணமாகப் போய்க் கொண்டிருக்கும்போது தீர்மானத்தில் உறுதிப்பாடு முக்கியமானதன்று. ஆனால், செய்யும் காரியங்களில் தடங்கல் ஏற்பட்டால், நாம் இதற்கு அதிக சிரத்தை எடுத்து அதைக் குறைந்த நேரத்தில் முடிக்க முற்படுகிறோம். தீர்மானத்தில் திட நம்பிக்கையில்லாத மனிதர்கள் ஒரு சிறிது தடங்கலோ, எதிர்ப்போ ஏற்பட்டவுடனே அவ்வேலையை கைவிடு கிறார்கள். இது முக்கியமாக வெறுக்கத்தக்கது.

## மனத்திட்பத்தை எவ்வாறு வளர்ப்பது ?

இந்தத் தலைப்பின் முக்கியத்துவம் நம் வாழ்க்கையில் தெளிவானது. பல மக்களின் வாழ்வில் பலவிதச்சூழல்கள் தோன்றி அவைகளுக்கு வெளிப்படையான தீர்வைக் காண அச்சமயத்திலேயே தோன்றலாம். ஒருவன் நல்ல பயனுள்ள வாழ்க்கையை அமைத்துக்கொள்ள அல்லது ஏற்படுத்திக்கொள்ள சில சாதகமான சந்தர்ப்பங்கள் எப்போதாவது ஏற்பட்டால் அவைகளை வெகு சீக்கிரத்தில் கிரகித்துக் கொண்டு பயன்படுத்திக் கொள்ள வேண்டும். சில மனிதர் முற்றிலும் மயங்கி நிற்கின்றனர்? தேவைகள் ஏற்படும்பொழுது செயலிழந்த நிலையினால் ஆட்படுத்தப் படுகிறார்கள். தங்களுடைய விருப்பத்தைச் செயல்படுத்தக் கட்டாயப்படுத்தும் தேவைகள் இயற்கையாகவே, இத்தகைய உளவியல் சம்பந்தப்பட்ட தடைகள், அவர்களை முடிவுகள் எடுப்பதிலிருந்து திறமையற்றவர்களாக்குகின்றன.

நோய்கள் சம்பந்தப்பட்ட காரணங்களாலன்றி, இந்தத் திறமையின்மையை நம்மால் தவிர்க்க முடியாது. வெறும் நிலைக் குண்டான திறனை அளிப்பதில்லை. ஒருவன் தனக்கு ஏற்படுகின்ற துன்பங்களையும் தடங்கலையும் எதிர்த்துச் செய்யப்பட தனக்குப் போதுமான சக்தி இருக்கிறது என்ற நம்பிக்கை ஏற்படுத்திக் கொள்ள வேண்டுமென்று உளவியலறிஞர்கள் கூறுகிறார்கள். இதை மறுபடியும் திருப்பிப் பெறமுடியாது. ஒவ்வொரு நாளிலும் ஏதாவது சிறு வழியிலாவது ஒரு காரியம் செய்ய வேண்டும் என்று தீர்மானிக்க வேண்டும். ஒருவன் பொதுவான தனக்குத் தீர்மானம் உள்ளது என்பதை உணரும்போது அவன் பெரிய செயலைச்செய்ய அதிகநேரத்தையும் சக்தியையும் முயற்சியையும் தனக்குள் ஏற்படுத்திக்கொள்ளுகிறான். எல்லாச் சூழலிலும் ஒரு சாதாரண நடத்தையை ஏற்படுத்திக்கொண்டு கோபமோ பயமோ, ஏற்படுவதற்கு அனுமதிக்கக் கூடாது. வில்லியம் ஜேம்ஸ், தம் முடைய 'மனவியலின் தத்துவம்' என்ற புத்தகத்தில் மனத்

திடத்தை வளர்ப்பதற்காகப் பல பயனுள்ள குறிப்புகளைக் கொடுத்துள்ளார். நம்மில் பலர் எந்தவிதத் தீர்மான சக்தியை பயன்படுத்த தேவையில்லை. அதன் விளைவாக அது பலமிழக்கிறது என்று அவர் கூறுகிறார். இதைத் தவிர்த்து விருப்பமானது செயலிழக்காமலிருப்பதற்காகத் தினமும் சிறிய செயல்களில் சரியான பயிற்சி செய்யவேண்டும். இவ்வாறு ஒருவன் குளிர்ச்சியான சீதோஷ்ண நிலை இருந்தபோதிலும், குளிர்ந்த நீரில் குளிக்க வேண்டுமென்று தீர்மானிக்கலாம். குறித்த நேரத்திற்குள் சிறு வேலையை முடிக்கவும் தீர்மானிக்கிறான். அல்லது ஓரிரு நாள்களுக்கு இரவில் உண்ணாவிரதம் இருப்பதாகத் தீர்மானிக்கிறான். இத்தகைய பயிற்சிகள் மனிதனுடைய மனத்திட்பத்தைத் தீவிரப்படுத்தும் என்றும், இத்தகைய நேரங்களில் விதிவிலக்குகள் ஏதும் இருக்க கூடாது என்று ஜேம்ஸ் கூறுகிறார்.

இந்த விதிவிலக்கு அபாயகரமானது. ஏனென்றால் அது ஒருவனை பழைய நிலைக்கு எடுத்துச் செல்லும். புகைபிடிக்கும் பழக்கத்தைவிட விரும்பும், ஒருவன் அதைப் பல மக்களுக்கு சொல்ல வேண்டும். ஏனென்றால் பிறகு அவனால் இப்பழக்கத்திற்கு மீண்டும் வரமுடியாது. அதே நேரத்தில் அவன் 'நாளை ஆரம்பிப்பேன்' என்று சொல்லுதல்கூடாது. அவன் தன் பழக்கத்தை நாளடைவில் குறைக்காமல் இருக்கவேண்டும். ஏனென்றால் ஒவ்வொருநாளும் அவன் தன் கெட்டபழக்கத்தை வெளிப்படையாக காட்டிக் கொள்ளுவதால் அப்பழக்கம் நிலையாக நின்றுவிடும். இப்பொழுதே விடும் பழக்கமானது கட்டாயமான தேவை. இதை ஏற்படுத்திக்கொள்ளுமுன் அவன் தன்னை அதற்கேற்ப மாற்றிக்கொண்டு அதன்படி கண்டிப்பாக நடக்க முற்படவேண்டும்.

ஒரு மனிதன் ஏதாவது பயனுள்ள செயலைச் செய்யவிரும்பினால் அது அவனுக்கு இன்றியமையாதது என்ற எண்ணத்துடன் செய்யவேண்டும். ஏனென்றால் அவன் மனதைக் கவரும் எண்ணத்திலே ஒரு தொடர்ச்சியான ஊக்கிவிக்கும் சக்தி அச்செயலைக் முடிப்பதற்கு அவனுக்குத் துணைபுரியும், தனி மனிதனுக்கு நோக்கம் முக்கியமானதாக இருக்கவேண்டும். முன்பே சொன்னப்படி முடிவானது தூரத்தில் இருக்கக்கூடாது. கடைமுடிவு ஆனது தூரமானதாக இருந்தால், அதை அடைய நம் வழிகளில் சில குறிப்புகளை வைத்துக் கொள்ளவேண்டும். செய்த செயலையும் அவ்வப்போது சரிபார்த்தல் வேண்டும். மற்றவர்களின் எதிர்மாறான கருத்துக்களை எடுத்துக் கொள்ளக்கூடாது. வீட்டில் அல்லது அலுவலகத்தில் அல்லது எங்காவது சிறு

பொறுப்புகளை எடுத்துக்கொள்வது நம்முடைய மனத்திட்பத்தைக் கூர்மையாக்குகிறது. ஏனென்றால், நம் அன்றாட வாழ்வின் நம் பொறுப்புக்கேற்ப உள்ள திறமைகளில் முடிவுக்கான பல சந்தர்ப்பங்கள் எழலாம். சில பொறுப்புகளை எடுத்துக்கொள்வதன் மூலம் ஒரு மனிதன் தன் நிலையிலிருந்து வெளியேறித் தன் தீர்மானத்தை வளர்த்துக்கொண்டு அதன் மூலமாகத் தன்னுடைய குணப் போக்கை வளர்த்துக்கொள்கிறான்.

## தன்னடக்கமும் தன் பகுப்பும்

இந்த இரண்டு மன உருக்குகளும் குணங்களில் நீதிநெறிக்குரியது. அவைகளில் சுற்றுப்புறச் சூழ்நிலைக்கு ஏற்ப நம்மைப் பிரதிபலிக்கச் செய்வதால் அதனுடையநோக்கம் விசாலமானது. ஒருவன் சமூகத்தின் நிலையில் தன்னைத்தன் அன்றாட வாழ்வின் நடத்தையில் அடக்கிக்கொள்ளுதல் வேண்டும். ஏனெனில், அவர்களுடைய நாட்டங்களில் மோதல்கள் ஏற்படலாம். தன் அடக்கம் என்ற சொல் நீதி நெறியோடு அல்லது ஆத்மீகத் தொடர்புள்ள செயல்களில் பயன்படுகிறது. மாநிலத்தில் நல்ல குடிமகனாக இருப்பது என்பது இறுதியான முடிவன்று. இதைவிட முக்கியமானது அவன் ஆன்மீகத்திலும் நன்னடத்தையிலும் நல்லவனாக இருப்பதே. இந்த இரு கருத்துக்களும் இம்முடிவுகளுக்குத் தொடர்பு உள்ளது. சமூகத்தினுடைய உறுப்பினர்கள் மதத்திலும், நன்னடைத்தையிலும் நடுநிலைமையான மனப்பாங்கையும் இந்த நிலையில் பின்பற்றுவார்களா? என்பது ஒரு சர்ச்சைக்குரிய கேள்வி. ஒரு தனிமனிதன் தன் மாநிலத்தில் நல்ல குடிமகன் என்று கூறப்பட்டால் தன் வேலை முடிந்ததென்று அவன் நினைக்கக்கூடாது என்பது ஒப்புக் கொள்ளப்பட்ட கருத்து. அவன் நன்னடத்தையிலும் ஆன்மீகத்திலும் முழுமையடைய கடினமாக உழைக்க வேண்டும். இந்த இரண்டிலும் தன்னடக்கமானது இயங்குகிறது.

சமூகம் நன்றாகச் செயல்படுவதற்காகச் சில சம்பிரதாயத் தடைகளை சமூகமானது விதிக்கிறது. அவைகளை ஒவ்வொருவருக்கும் ஒப்புக் கொள்ளவேண்டும் அன்றி அவற்றிற்கு எதிராகப் போகக்கூடாது. ஒரு மனிதன் மற்றவர்களின் தேவைகளுக்கும் வசதிகளுக்கும் தடையாகத் தன்னுடைய தேவைகளிலும், வசதிகளிலும் நினைவுள்ளவனாக இருக்கலாம். மற்றொருவன் தன்மீது தெரியாமல் இழைக்கப்பட்ட அநீதியைப்பற்றி, அதிகமாக நினைவு கொள்ளுவதால், அவனைக் கொல்லும் அளவுக்கு பழிவாங்க சபதமெடுத்துக் கொள்கிறான். இவை யாவும் தவறானவை என்பதும் நீதிநெறிக்கு அப்பாற்பட்டவை என்பதும் நன்கு தெளிவா

கின்றன. இந்த நேரங்களில்தான் அவனுடைய சந்தோஷத் திற்காகவும் தன்னடக்கம் தேவை. இந்தத் தடைகளை நாம் சம்பிரதாய நன்னடத்தை என்று குறிக்கலாம்.

உண்மையான அல்லது ஆக்கபூர்வமான நீதி நெறிகளுடன் சம்பிரதாய நன்னடத்தையானது சாந்திருக்கிறது. நீதி வழுவா மனிதன், தான் சரி எனக்கருதும் எது நீதியின் அளவை, தான் அறிந்தே ஒரு முன் மாதிரியாக வைத்துக்கொள்ளுகிருன். மோச ஸின் பத்து கட்டளைகள் இவ்வழியைக் குறிக்கின்றன. மனிதன் என்பவன் விவாதிக்கும் திறன், விருப்பம், உணர்ச்சி ஆகியவை களின் கூட்டு உருவம், ஆனுல் ஒவ்வொன்றிலும் தனிமனிதன் அவரவர்களுடைய தனித்தன்மையில் மாறுபடுகின்ருன். இக் காரணங்களில் ஒவ்வொன்றிலும் பல விதமான பிரிவுகள் உள்ளன. இதனுல் எதிர்ப்புகள் ஏற்பட ஏதுவாகின்றது. சில வழக்குகளில் சில மனிதர்களுக்கு விருப்புகளும் மனவெழுச்சிகளும் மையமாக இருக்கின்றன. அவன் அவனுடைய உணர்ச்சிகளின் அடிமை யாகவும் இருக்கிருன். அவன் தன்னுடைய மகிழ்ச்சியைத்தன் நடத்தையின் அளவுகோலாக மாற்றி மற்றவர்களுடைய தேவை களையும் உரிமைகளையும் அசட்டை செய்கிருன். சமூகத்தில் உள்ள ஒருமைப்பாடில்லாத் தன்மையையும் குழப்பத்தால் விளைகின்ற நிகழ்ச்சியையும் சம்பிரதாய நன்னடத்தையானது தனிமனித னுடைய நடத்தையில் சில தடைகளை ஏற்படுத்துகிறது.

நிகழ்ச்சிகள் வழக்குகளில் வெளிப்புறத் தடைகளும் உண்டு என்பதை நாம் உணர வேண்டும். அவை வெளிப்புற எதிர் விளைவுகளை அடிப்படையாகக் கொண்டவை. மனிதன் குறைந்த அதிகமான சுயலாபங்களைக் கொண்டவன். இதன் தடைகளாகவும் உட்புறமானது இதைப்போன்ற தனிமனிதன் அவனுடைய உடலுக்குத் தேவையான திருப்தியை அறிகிருன். அவன் வாழ்க்கைகளை மிருகங்களின் வாழ்க்கை முறைகளைவிட வேறு பட்டது என்பது தெளிவான அம்சமென அறிகிருன். உடல் சம்பந்தமான மகிழ்ச்சியானது மாறுபடத்தக்கது என்பது அறியப்படுகிறது. அது உண்மையும் நிரந்தரமானதும் அன்று. அது ஆத்மீகமானது என்று அழைக்கப்படுகிறது. ஒவ்வொருவ னுடைய மகிழ்ச்சி இம்மைக்குரியதாயினும் உணர்ச்சியும் அழுத்திக் கூறுவதுடன் தீவிரமானதும் நிரந்தரமானதும் ஆகும். இதனுல் தான் உணர்விட திருப்திக்கு ஒரு சுய தடை தேவையாக உள்ளது.

நன்னடத்தையின் நடைகளுக்கும், உறுதிப்படுத்துதலுக்கும் மனத்திற்கும் இடையே பின்னுல் கூறப்பட்டது மனிதன் நீதி

நெறிக்கும் ஆத்மீக வாழ்க்கைக்கும் உயர்ந்த குறிக்கோளுக்கு தூண்டுகிறது என்பதை நாம் நம்புகிறேம். மதத்தில் குறிக்கோளை மோட்சம் என்று கருதவேண்டும். இந்த நோக்கை அடைய ஒருவன் சரியான நல்ல நடத்தைக்குரிய வாழ்க்கையை ஏற்படுத்திக் கொண்டு மதத்தின் கட்டளைகளைக் கடைப்பிடித்தல் வேண்டும். இது தன்னடக்கம், உடல்கட்டுப்பாடு, பேச்சு, போன்றவற்றி க்கு தேவையாயிருக்கிறது. இந்த அடிப்படையான தேவைகளில்லாமல் நீதி நெறியிலோ அல்லது, ஆத்மீகத்துறையிலோ முன்னேற் றத்தைக்காண முடியாது. உணர்வுகளின் அடக்கமும், பரிசுத் தமும் உலகிலுள்ள எல்லா மதங்களாலும் எதிர்பார்க்கப்படுகின்றன. எல்லோருக்கும் பொதுவான செய்தியைத் தரும் பகவத்கீதையில் புலனடக்கம் என்பது ஒரு மனிதனின் ஆன்மீக ஒழுக்கவியல் சம்பந்தமான வாழ்வில் பெரும்பங்கு குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த உலகில் பிறருடன் நாம் வேலையில் மூலமான உறவை ஏற்படுத்திக் கொள்கிறேம், என்பதை அது கற்பிக்கிறது. நாம் கடவுளுடன் மனிதனை, இயற்கை ஆகியவைகள் ஐக்கியப் படுத்தப் படுகிறது. நல்ல செயல்களினுலும் நன்னடத்தையினுலும் வெளிப் படுத்தப்படுகிறது.

முழுமனிதன் இந்த உலகத்தின் நன்மைக்காக அல்லது அவன் வாழ்கின்ற சமுதாயத்திற்காக செய்ய வேண்டும். அவன் கீதையின்படி தொண்டு செய்யவேண்டும். உலகத்தின் ஒற்றுமை என்பது உண்மையில் உயர்வான குறிக்கோள், ஒவ்வொருவரும் அதனுடன் ஒத்துழைத்து மனிதவர்கத்தின் நன்மையைக் குறிக் கோளாகக் கொள்ள வேண்டும். நல்ல மனிதர்கள் உடலின் குறுகிய கட்டுத்தளைகளை எப்பொழுதும் உதாசீனப் படுத்துகிருர்கள். புலன் அடக்கமே அவர்களின் முக்கியமான குணநலன் ஆகும். புலன் அடக்கம் என்பது உணர்ச்சிகளை அடக்கவோ, அழிக்கவோ அன்று. இது ஒரு சந்நியாசிக்குரியது. இதைப்பற்றி கீதையில் கூறப் படவில்லை. காமம், குரோதம் லோபம் ஆகிய பேராசைகளை ஒழிக்கவேண்டும். இதனுல் தவருன ஆசைகள் ஒழிக்கப்படுகின்றன. மனிதனை சம்சாரம் என்ற சக்கரத்தில் கர்மா கட்டுபடுத்தினுலும் சாந்தத்துடனும் விருப்பு வெறுப்பின்மையும், செயல்களின் முடிவுப்பற்றி ஆசையில்லாமல் தொண்டு செய்பவன் முக்தி அடைகிருன். இதுவே புகழ்பெற்ற நிஷ்காமயா கர்மம் ஆகும். ஆன்மாவில் பொக்கிஷத்தையும் சமூக சந்தோஷத்தையும் திறக்கக்கூடிய திறவுகோலாகத் தன்னடக்கம் இருக்கிறது.

ஒருவன் தன்னைப் பகுத்தறிதலின் முக்கியத்துவம் தெளிவானதாகும். மூன்றும் மனிதனைபோல் நம்மை நாமே விருப்பு வெறுப்பின்றிப் பகுத்தறியும் போது நம்முடைய தவறுகளைத் தெரிந்து கொள்கிறோம். மனிதன் நல்லதும் தீயதும் கலந்த கலவையினுல் ஆனவனுகையால் நம்மிடமும் நல்ல அம்சங்கள் இருக்கலாம். துர்க்குணங்கள் பரிசுத்த மற்றவை அதேகவனத்துடன் ஆகியவைகளை முழுமையாக அகற்ற நாம் சீராக முயல வேண்டும். நேரத்தில் நற்குணங்களை வளர்க்க வேண்டும். இப் பகுப்பு புறஞ்சார்ந்ததாக இருப்பதைவிடக் கற்பனையான நிலையாக இருக்கலாம். நம்மை நாமே நியாயப்படுத்திக் கொள்ள விரும்பும் ஓர் எண்ணம் இருப்பதால் இது ஏமாற்றக் கூடியதாகவும் இருக்கலாம். ஒரு குறிப்பிட்ட அளவான பயிற்சியினுலும் விடாமுயற்சியினுலும் இதைத்தாண்டி நமக்கு நாமே நீதிபதிகளாகலாம். ஆத்மீக சோதனை உணர்ச்சியானது ஒரு முடிவான இலக்கை அடையத் தேவைப்படுகிறது. இதனுல் கோபத்திற்கோ பொருமைக்கோ உட்பட்ட ஒருவன் இந்தத் தவறுகளையும் புரிந்து கொண்டு இவைகளை முற்றிலும் அகற்ற முயற்சி செய்கிருன். உலகியல் பொருள்கள் சம்பந்தமான வரம்பிலும் சமூகத்திலுள்ள நல்லதையும் கெட்டதையும் கண்டறியத்தான் படிப்பு தேவையாயிருக்கிறது. உலகியல் ஆசைகளில் முன்னேற்றமோ, தோல்வியோ இத் தன்பகுப்பினுல் காட்டப்படும்.

## அத்தியாயம்-4

# அண்டை அயலாருடன் நமது உறவு

## சமுதாயத்தில் அயலாரின் அளவிடக்கூடிய தொடர்பு

இனி, சமுதாயத்தைப் பற்றியும், அதில் நாம் கொண்டுள்ள பங்கு பற்றியும் இங்குக் கவனிப்போம். எடுத்த எடுப்பிலேயே, நமது சுற்றம் என்பது முதன்மையானதாக சமுதாயத்தையே சாரும்; சமுதாய நலன் சேராத தனித்தன்மை என்பது, முழுமை தரவல்ல— குணநலன்களற்ற— முற்றுப் பெருத வாழ்க்கையையே குறிக்கும் என்று கூறுமளவிற்குச் சில ஒழுக்கவியலறிஞர்கள், சமுதாயத்தின் முக்கியத்தைக் குறிக்கும் போது சொல்ல முற்படு கிருர்கள். சமுதாயத்தைச் சாராது, தனித்து நிற்கக் கூடிய மனிதர்கள் என்று யாரும் இருக்க முடியாது. இது நாம் நம்முடைய சீர்மை மிகு வாழ்க்கை என்பது நமது சுற்றத்திலிருக்கும் மனிதர் களின் வாழ்வுடன் தொடர்புபடுத்தப்பட்டுள்ளது என்பதைக் குறிக்கும். இக் கருத்துக்களின் செல்லுபடியாகும் தன்மையை சமுதாய ஒழுக்க நிலையங்கள் என்ற தலைப்பின் கீழ் நாம் அள விடலாம்.

சமுதாயம் என்பது மிகவும் விரிந்து பரந்திருப்பது. இது இப்பரந்து விரிந்த உலகை யொத்தது. எனவே, நாம் இவ் வுலகை நம் இல்லமாக வருணிப்பதும் உண்டு. இதேபோல் இப்பரந்த உலகே நம் நட்பும், சுற்றமும் ஆகும் என்றும் கூறலாம். ('யாதும் ஊரே யாவரும் கேளிர்.,) வானவியல் எண்ணிக்கைகள் கணிதசாஸ்திரத்தின்படி உண்மையான எண்ணிக்கை களையும், கருத்துக்களையும் கொடுத்தபோதிலும், நம்மால் எவ்வாறு, பாராட்டப்படமுடிவதில்லையோ, அதேபோல், நம்மோடு நெருங்கிய தொடர்புள்ள இச்சமுதாயத்தின் ஜனத்தொகையினை மிகப் பெரிய தொகை நம்மைத் திகைப்படையச் செய்கிறது; தடுமாற வைக்கிறது. நாம் நம்முடைய அண்டை அயலாருடன் நெருங்கிய

தொடர்பு கொண்டுள்ளோம். நம்முடைய தொடர்புகள் அவர்களுடன் நேர்மையாகவும் உறுதியுடையதாகவும் அமைந்திருக்கிறது.

அத்துடன் நாம் அவர்களுடன் கொண்டுள்ள உறவின் நிலையையும் சரியான நிலையில் அறியும் நிலையில் உள்ளோம். இவ்வாறு சமுதாயம் என்ற சொல் நம் நாட்டு மக்களையும் அயலார் என்ற சொல் நம்மைச் சுற்றியுள்ள கிராமங்களிலும் பட்டி தொட்டிகளிலும் உள்ள மக்களையும் குறிக்கும் என வரையறுக்கலாம். ஒழுக்கவியல் கருத்துக்கள் நம் அயலாருக்கு எவ்வாறு செயல்படுத்தப்படுகிறதோ, அதுபோலவே சமுதாயத்தின் மற்றப் பகுதிக்கும் பொருத்தமாகும் என்பதை நாம் மறக்கக்கூடாது; நினைவில் கொள்ள வேண்டும். நமக்கும் சமுதாயத்திற்கும் அண்டை அயலாருக்கும் உள்ள தொடர்பின்மூலம் சமுதாயத்திற்கு நம்முடைய கடமையுணர்வைத் தெளிவாக வெளிப்படுத்துகிறோம்.

ஒரு கிராமத்தின் ஒரே மொழி, பழக்க வழக்கங்களாலான ஒரு குழுவையோ அல்லது பகுதியையோ சார்ந்துள்ள நாம், அதிலுள்ள மக்களுடன் (அயலாருடன்) மிக நல்ல தொடர்பு கொண்டுள்ளோம் என்பதே நகர வாழ்விற்கும், கிராம வாழ்விற்குமுள்ள வேறுபாட்டில் அமைந்துள்ளது. ஆனால், நகர வாழ்வில் கிராமவாழ்வினைப் போல நமது அயலாருடன் பல காரணங்களால் நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பதில்லை. நமது வேலையில் உள்ள வேறுபாடுகள் மட்டுமின்றி, வாழ்க்கைத்தரம், அந்தஸ்து, செல்வம் ஆகியவை நமது அயலாருடன் நாம் கொள்ளும் நெருக்கத்தை வெகுவாகக் குறைக்கின்றன. கிராமங்களில் கூட்டு வாழ்வில் பங்கு கொள்ளும்போது, நகரவாழ்வில் நம்மால் அவ்வாறு செய்ய முடிவதில்லை. இருந்த போதிலும் இங்குக்கூட, புலன்களால் எளிதில் அறியக்கூடியதாய் இல்லாத போதிலும், சிறப்பான சமுதாயத் தொடர்பு உள்ளது. நம் அயலார் பல்வேறு மொழிகளையும், சமூகப் பழக்கங்களையும், மற்றவைகளையும் உடையவர்களாயினும் பொதுச் சுற்றுப்புற நன்மைகளிலும் துன்பங்களிலும் நம்முடன் பங்கு கொள்கின்றனர். அவர்களும் நமது நகராட்சிக்கு உட்பட்டவர்களாக இருக்கிறார்கள். நம்மைச் சுற்றியுள்ளவர்களிடம் பொருள்களை வாங்கவும், விற்கவும் செய்கிறார்கள். மேலும், ஒத்த சூழ்நிலைகளில், ஒத்த முறைகளில் பொதுவாகச் செயல்படுகின்றனர் நம்முடைய வாழ்க்கை தொலைவிலுள்ள மக்களைவிட நமது அயலாருடன் பின்னிப் பிணைந்திருப் பதால் இக்கருத்து வலியுறுத்தப்படுகிறது.

## தன்னலமும் பிறநலமும்

நாம் பிறரிடம் நடந்து கொள்ளுகின்ற முறையையும், மனப் பாங்கையும் இருவகைக் கருத்துக்களால் ஒழுக்கவியல் ஆசிரியர்கள் குறிப்பிடுகிறார்கள். அவையே தன்னலமும், பிற நலமும் எனப்படும் கருத்துக்களாகும். மற்றவர்களால் தனக்கு ஏற்படும் நன்மையையும், இன்பத்தையும், தேவைகளையும் நிறைவு செய்து திருப்தி அடையும் மனித இயல்பையே தன்னலம் குறிக்கிறது. பிற நலம் என்பது மற்றவர்களுடைய இன்பத்திற்காக அர்ப்பணிக்கும் மனப்பாங்கைக் குறிக்கும். பிறநலனை முற்றிலும் புறக்கணித்து அதனால் வருகிற தன்னலத்தையோ, தன்னலத்தை முற்றிலும் துறந்து பிறருக்காக ஏற்படும் பிறநலத்தையோ முடிவாகக் கூறப்போனால், இரண்டும் திருப்தி அளிக்கின்ற வகையிலே இல்லை என்றுதான் கூறவேண்டும். ஒருவன் தான் நல்ல உடல் நலமும், திறமையும் பெறுதவரையில் முழுக்க முழுக்க மற்றவர்களின் நலனுக்காகப் பாடுபடுவது என்பது முடியாத தொன்றாகும். ஒருவன் சந்தோஷமாகவும், திருப்தி யாகவும் இல்லாவிட்டால் பிறர் நலம் பேண முடியாது. முழுமையான தன்னலம் என்பதும் இருக்கமுடியாது. ஏனெனில் ஒருவரது நலம் மற்றவரது நலத்துடன் இணைத்துச் சமைக்கப்பட்டிருக்கிறது; சில வேறுபாடுகள் வேண்டுமாயின் இருக்கலாம். காண்ட் என்ற அறிஞர் தமது "ஒழுக்கவியல்" பற்றிய மெய்விளக்க இயலில் குறிப்பிடுவது போல, பகுத்தறிவுள்ளவர்களின் முடிவு அவர்களி டமே உள்ளது. அவை அவர்களுக்குத் தொடக்க வழிகளல்ல. எனவே, ஒருவரும் மற்றவரது நலனுக்கான கருவியாகப் பயன்படுத் தப்பட வேண்டியதில்லை, ஒழுக்கம் என்பது பிறரது நலனுக்காக, சமுதாயத் தேவைக்காக ஒருவனுடைய தேவைகளை அமிழ்த்திட வேண்டும் என்று பொருள் தரவல்லது அன்று. எனவே, தன்னலம் பிறநலத்துக்குமிடையே ஒரு பொதுவான நடு நிலைமைக் கருத்தைத் தேடிடல் வேண்டும்.

## நீதியும், பரஸ்பர உதவியும்

நம்முடைய மனத்திலும், மற்றவர்களிடம் நாம் நடந்து கொள்கின்ற நியதிகள் பற்றிய உணர்வுகள் நம்முள் நீண்ட நாட் களாக நிலவி வந்துள்ளன. இது பற்றித் தெளிவாகக் கூற முற்படுவோமானால், நீதி என்பது நமக்கும், பிறருக்கும் ஒரே விதமானதாகவே இருக்க வேண்டும் என்பதை அறியலாம்.

நடுவு நிலைமை கோடாத மனப் பாங்கு நம்முடைய உறவுகள் பிறருடன் நன்முறையில் செயல் படுத்தப்படும்படி செய்ய வேண்டும். மிக நெருக்கமாகப் பின்னிப் பிணைக்கப்பட்ட

சமுதாயத்தில், இக்கருத்து மிகத் தெளிவாகக் காணப்படுகிறது. நாம் அதிகமாகக் காண முடியாத மக்களை விட, தினம் தினம் நெருங்கிய தொடர்பு கொள்கின்ற நம் அயலாரிடம் நீதியும், நடுவு நிலைமை கோடாத் தன்மையையும். நாம் சுலபமாகக் காணலாம், பல்வேறு மொழிகளாலும் நிறத்தாலும், சாதிகளாலும், இனத்தாலும். மதத்தாலும். பிரிக்கப் பட்டிருந்தாலும், மனிதனை அடிப்படையில் ஒன்றாக இணைக்கக் கூடியதாக, அவர்களிடம் உணர்வையும். தோழமைப் பண்பையும் தரவல்ல காரணக் கூறுகளை மதித்து நடக்கும் நற்பண்பினையே அடிப்படையாகக் கொண்டுள்ளது, சமத்துவம் என்ற உணர்வு. நாளடைவில் இப்பண்பு நம்மிடம் மிக முக்கியமானதாக வந்து அமைகிறது.

ஒருவருக்கொருவர் பரஸ்பர உதவி செய்தலும், கூட்டுறவு கொண்டிருத்தலுமான காரணக் கூறுகள் மனிதர்களிடையே, ஒவ்வொருவரிடமும் நெருங்கிய தொடர்பை உண்டு பண்ணுகிறது, சமுதாயம் என்ற எந்திரத்தில் உராய்வினைக் குறைக்கும் உயவு எண்ணெய்போல இருப்பது பரஸ்பர உதவியாகும். பிறருக்கு உதவி செய்வதற்குத் தயாராகக் காத்துக் கொண்டிருப்பவர்களிடமிருந்து, உதவி தேவைப் படுபவர்களுக்குச் சுலபமாக, கைம்மாறு கருதாமல் அவ்வுதவி கிட்டுகிறது. பரஸ்பர உதவி என்பது நமது வள்ளல் தன்மையையோ அல்லது சுயநல அடிப்படையான கருத்துக்களையோ ஆதாரமாகக் கொண்டிருக்கலாம். எப்படியாயினும், அது பிறர்க்கும் நன்மை தரத்தக்கது. அயலாரிடம் நிகழ்ச்சிகளைத் தூண்டும் கொள்கையாகக் கூட்டுறவு அமைத்தல் வேண்டும். விதைத்தலுக்கோ, பணமுடையாக இருக்கும் போதோ, திருமணச் சடங்குகள் நடைபெறுதலுக்கான உடலுழைப்பு தேவைப்படும் போதோ விதைகளோ, பணமோ, ஆள்வலிமையோ ஒருவருக் கொருவர் கொடுத்து மனமுவந்து உதவி செய்தல் சாதாரணமாகக் கிராமங்களில் காணக்கூடிய தொன்றாகும்.

உதவி தேவைப்படும் ஒருவரை மிகவும் அறிந்தவர்கள் கூட்டமாக அவரிடம் சென்று தங்களால் இயன்ற அளவுக்கு அதிக உதவி செய்கிறார்கள். சிறிய பிரச்சனைகள், கவலைகள் இவ்வாறு நீக்கப்படாவிட்டால் அதுவே மிகப் பெரியவைகளாக உருவெடுத்து மனிதனின் மன அமைதியைக் குலைத்து விடுகின்றது. இவ்வாறு அவர்களின் குறைகள் தீர்க்கப்படுவதால், மொத்தத்தில் கிராமத்திலுள்ள மக்கள் மன அமைதியுடன் வாழ்கின்றனர். சில சமயங்களில் பொறுமையாலும், தீய எண்ணங்களாலும் பாதிக்கப் படுகின்றனர். அதிகாரபூர்வமான கூட்டுறவுச் சங்கங்கள் இச்சிறு சமுதாயத்தில் தங்களுடைய முக்கியமான இடத்தைப் பெற்றிருக்கின்றன. இது குறித்துப் பின்னால் பார்க்கலாம்.

அத்தியாயம் - 5

# சமூக அமைப்புகளும் அவற்றின் கொள்கைகளும் மரபுகளும்

## முன்னுரை

மனிதனது தொடர்பு சமுதாயத்துடன் எவ்வாறு உள்ளது என்பதைப் பற்றி நாம் இங்கு விவாதிப்போம். ஓர் ஒழுங்கான வழியிலே அவன் சமுதாயத்தில் எவ்வாறு வாழ்கிறான் என்பதைப் பற்றியும் மிக விரிவாகக் காணவேண்டும். இச் சமுதாய அமைப்புகளின் ஆரம்பம் அல்லது மூலத்தையோ அதன் வளர்ச்சியையோ பற்றி நாம் கவலைப்படத் தேவையில்லை. அவை எந்தக் கொள்கைகளைத் தாங்கி நிற்கின்றன வென்றும், அவற்றின் மரபுகளும் பாரம்பரியமும் எவை என்றும் குறித்தால் அதுவே போதுமானது. உலகிலுள்ள எல்லா உயிரினங்களையும் பற்றி நோக்கும் போது எல்லா உயிரினங்களையும் விட, மனித இனம் சூழ்நிலைகளுக்கு ஏற்ப மிகவும் சிறந்த முறையில்தன்னை அமைத்துக்கொண்டு தற்போதைய முன்னேற்ற நிலைக்குத் தன்னை உயர்த்திக் கொண்டுள்ளது.

மனிதன் என்பவன் கூடிவாழும் பண்புள்ளவன்; குழுக்களில் ஒருவனாக வாழ்கிறான் என்ற முக்கியமான உண்மையை மறந்து விடலாகாது. இத்தகைய வாழ்வில் பல நன்மைகள் உள்ளன. அவற்றுள் முதன்மையானது, அக்குழுவின் அங்கத்தினர் கூட்டுப் பாதுகாப்பை அனுபவித்து வருவதேயாகும். வேலையடிப்படையிலான பிரிவுகளின் மதிப்பு முன்னதாக வருகிறது; செய்கைகளில் தனிச் சிறப்பைப் பெற முடிகிறது. போர்வீரர், வணிகர், ஆசிரியர், மதகுரு, மருத்துவர், வழக்கறிஞர், மேலும் தொழிலாளர்கள் ஆகியோர் தங்களுடைய தொழில் துறையின் தனிச்சிறப்பு உடையவர்களாக நுழைகின்றனர்; திகழ்கின்றனர். கூட்டுவாழ்வு என்பது மற்றவர்களுடனும், குழுக்களுடனும், தனிப்பட்ட, குழுத்தொடர்பை எதிர் பார்க்கிறது. இதன் விளைவால், நீதி, ஒருமைப்பாடு போன்ற சமுதாயத்தரங்களும், மதிப்புக்களும் எழுகின்றன.

மனிதன் கூடிவாழும் பண்பும், பகுத்தறியும் பண்பும் கொண்டவனாகக் கருதப்படுவதால், ஒன்றுக்கொன்று எதிரான குணநலன்களையுடைய இரு மனப் பாங்குகள் உண்டாகின்றன. பலர்

பிறருடன் கூட்டுறவுடன் இருந்து, சில பொதுச் சட்ட திட்டங் களுக்கும், தேவைகளுக்கும் தம்மை உட்படுத்துபவராக இருக்கலாம். ஆனால், அதே சமயம் அவனிடம் தான் கொண்ட கொள்கையில் பிடிவாதமாக இருக்கும் சுய நம்பிக்கையும், எரிச்சலூட்டக்கூடிய மனப்பாங்கும் அமைந்து, அவனைச் சுதந்தரத்துக்கு எதிரான கருத்துக்கள் எனக் கருதும் செயல்களை எதிர்த்துப் புரட்சி செய்யத் தூண்டுகிறது. சில சமயங்களில், அதே மனிதன் ஒத்த அல்லது மாறுபட்ட சூழ் நிலைகளில் மாறுபட்டு நடக்கிறான். பல்வேறுபட்ட மனிதர்கள் இத்தகைய முரண்பாடான குணங்களை அதிகமாகவோ குறைவாகவோ வெளிப்படுத்துகிறார்கள். இவ்விரு குணங்களுக்கு மிடையே திட்டமான பிரிதளம் இல்லாதிருப்பதால், மனிதனின் இருநிலைத்தன்மையின் தோற்றம் வெளிப்படுத்தப்படாமல் இருக்க முடிவதில்லை. இவ்வாறு மனிதன் ஒரு குழுவின் உறுப்பினராகவும், அதே சமயம் அக்குழுவிற்கு எதிராகச் செயல்படும் புரட்சிக்கார னாகவும் இருக்கிறான்.

நடைமுறை வாழ்வு முதலாவதாக கூட்டுறவை வெளிப் படுத்துகிறது. இரண்டாவதாக நுட்பமாக அல்லது வெளிப் படையாக எதிர்ப்பையும் தெரிவிக்கிறது. சமூகத்துடன் ஒத்திருக்கும் அல்லது எதிர்த்திருக்கும் மாறுபட்ட மனப் பாங்குகளை அடிப்படையாகக் கொண்டு மனிதனுடைய சமுதாய வாழ்வின் நிலைப்புத்தன்மை அமைந்துள்ளது. எனவே, சமுதாயம் என்பது ஒரு முழுமையான ஒருமித்த அங்கமாக இல்லை. எண்ணற்ற வேறுபாடுகள் சமுதாயத்தினுள் இருப்பதால், அது குழுக்களாகவும் உட்குழுக்களாகவும் பிரிக்கப்பட்டுள்ளது. இந் நிலைக்குச் சுற்றுப்புறச் சூழ் நிலையும் பொறுப்பாகிறது. சரியான முறையில் சொத்து, நிலம் ஆகியவை பகிர்ந்தளிக்கப் படாமையால், உள்ளவர்கள், இல்லாதவர்கள், நிரம்பக் கொண்டவர்கள், அரைகுறைகள் என்ற பிரிவுகள் உண்டாகின்றன. கல்வி கற்றலில் பங்கு பெறுதல் ஒதுக்கப்படாமையால், கற்றவர்கள், கல்லாதவர்கள் என்ற பேதம் கற்பிக்கப்படுகிறது. சமூக அமைப்பு முழுமையான ஒன்றாக இயங்கினாலும், வேறுபாடுகள் இவ்வாறு உண்டாகியுள்ளன. சமுதாயம் என்பது பல்வேறு வேறு பாடுகளுக்கிடையில் இருக்கக் கூடிய அங்கம்; ஆனால், முழுமை யானதன்று எனச் சுருக்கமாகக் கூறலாம்.

பழக்க வழக்கங்கள், சட்டங்கள், ஒழுக்கவியல் கருத்துக்கள் ஆகியவற்றால் வழிநடத்தப்படுத்தப்படுகின்ற ஒன்று தான் நமது சமூக வாழ்வு. நமது பழக்க வழக்கங்கள் தொடர்ந்த பாரம்பரியம்

கொண்டது; மிகவும் சிறப்பு மிக்கது. மக்களின் உரிமைகளையும், சுதந்தரத்தையும் பாதுகாத்துத் தருவதற்காக அரசுகளால் ஏற்படுத்தப்பட்ட சட்டங்கள், ஒழுக்கம் என்பவை நமது உள்ளுணர்வுகளால் தோன்றியவை. பழக்கங்களாலும், மரபுகளாலும் ஏற்பட்ட நடத்தை என்பது நல்லொழுக்க புனிததத்துவத்தைக் கொண்டதல்ல நல்லவை, தீயவை, உண்மை, பொய், போன்றவை செய்யப்படும் செயலின் நோக்கத்தாலும், உள்ளத் தாங்கலாலும் தீர்மானிக்கப் படுகின்றனவேயன்றி வெளிப்புறக் கருத்துக்களாலோ, பழக்கங்களாலோ, அவற்றின் அனுமதிக்கப்பட்ட தன்மைகளாலோ தீர்மானிக்கப்படுவதில்லை.

## குடும்ப வாழ்வு, திருமணம் என்ற சமூக அமைப்புகள்

பொதுவாக இவையிரண்டும் இணைந்தே செல்வதால் இவற்றை நாம் ஒன்றாக இணைக்கலாம். குடும்பம் என்பது மிகவும் அடிப்படையான, தொன்மை வாய்ந்த அமைப்பு. அதனுடைய சட்டதிட்டங்கள் வெகுவாகத் தளர்த்தப்பட்டுள்ளன. குடும்பம் என்ற நிலை இல்லாதகாலம் எப்போதுமே இருந்ததில்லை. பொதுவாகத் தகப்பனே குடும்பத்திலுள்ள அனைவருக்கும் தலைவனாகவும் உயர்ந்தவனாகவும் கருதப்பட்டு வந்தான். தகப்பன் வழி குடும்பமும் மற்றொருவகையான தாய் வழி குடும்ப அமைப்பும் நாட்டின் சில பகுதிகளில் இன்னும் உள்ளன. இம்முறையில் குடும்பத்தின் தலைமைப் பொறுப்பு மனைவியையோ அல்லது குடும்பத்தின் தாயையோசாரும். மதச்சட்ட அனுமதிகள் இல்லாது செயல்படும் திருமண அமைப்புகள் கூட, தீய ஒழுக்கத்துக்கு தடை செய்வதற்கும் முறைகேடான பால் வாழ்வு அமைத்துக் கொள்வதற்கு மனிதனைத் தூண்டும் தன்மைக்குச் சிறந்த தடையாகவும் அமைந்துள்ளது. திருமணம் குடும்பவாழ்வை நடத்துகிறது. குடும்பம் திருமணத்தைக் காத்து நிற்கிறது. இவ்வாறு ஒன்று மற்றொன்றை மிக நுட்பமான முறையில் சார்ந்து, ஒன்று மற்றொன்றை நடத்திச் செல்கிறது. சில சமூகவியல் அறிஞர்கள் திருமணம் அப்படி ஒழுக்கத்தைப் பாதுகாத்து உறுதிசெய்யும் தன்மையுடையது அன்று என்ற கருத்துக் கொண்டிருக்கின்றனர். மதசம்பந்தப்பட்ட புனிதத் தன்மை வாய்ந்தது திருமணமா? அல்லது இருவரது தனிப்பட்ட உறவினருக்கும் அதிகமான உறவு உள்ளதா திருமணம்? எண்ணிறந்த மக்களால் முன்னதாகக் கேட்கப்பட்ட கருத்து உண்மையான கருத்தாக ஏற்றுக் கொள்ளப்பட்டு, செயல் படுத்தப்படுகிறது. பல இந்துத் திருமணங்களில்; கோவில்களில் நடைபெறுகின்ற திருமணங்கள், புனிதத் தன்மை வாய்ந்தவையாகக்

கருதப்படுகின்றன. வளரும் தொழில் நிலையங்களில், பொருளாதாரச் சூழலில், அறிவியல் அறிவின் வளர்ச்சியில் திருமணம் என்ற அமைப்பின் புனிதத்தத்துவம் படிப்படியாக அரிக்கப்பட்டு, மிகவும் தாராளமாக விவாகரத்துக்கள் அறிவுறுத்தப்பட்டு வருகின்றன. இத்தகைய மாற்றங்கள் தோன்றப் பல காரணங்கள் உள்ளன. 'இந்தியாவின் சமூக சீர்கேடுகள்' என்ற நூலில் டாக்டர் இராதா கமல்முகர்ஜி, இப்பிரச்சனையைப் புள்ளிவிவரங்களின் உதவியுடன் விவாதிக்கிருர். பம்பாய், கல்கத்தா, சென்னை போன்ற தொழில் பெருக்கமுடைய நகரங்களில் ஏற்படும் மோசமான வீட்டுச் சூழல்களாலும், பெரும்பாலான ஆண்களும், பெண்களும் திருமணத்தினுடைய பொறுப்புக்களை உதறித்தள்ளும் மனநிலையுடையவர்களாய் இருப்பதாலும், இலாபம் தரும் வேலைகளின் மீது வெறி கொண்டிருப்பதாலும், எண்ணிப் பார்க்க முடியாத அளவுக்கு உணவுப் பொருள் விலைவாசி உயர்வும், சமைத்தலில் உண்டாகும் வெறுப்பும், குழந்தைகளை வளர்ப்பது என்பது வெறுப்பூட்டக் கூடிய—களைப்படையச் செய்யும் கடன் என்று கருதும் எண்ணமும் ஒன்று சேர்ந்து திருமணம் என்பதை விரும்பத்தகாத ஒன்ருக அல்லது வேண்டாத தொன்ருகச் செய்துள்ளன. தனிப்பட்டவரின் சொத்து சட்டங்களால் அனுமதிக்கப்படுகின்ற வரையில் குழந்தைகளிடம் காட்டும் அன்பு என்பது மனித உணர்வின் ஆழமான தொன்ருக நீடித்திருக்கும் வரையில் திருமணம் என்ற அமைப்பு மானக்கேட்டினை அடையாது என்று நம்புகின்றனர்.

திருமணம் என்ற அமைப்பு தொடர்ந்து நீடித்தபோதிலும், அதன் உள்ளமைப்பில் பல மாறுதல்கள் நடநது கொண்டிருக்கின்றன. திருமணங்கள் நடைபெறுவதில் உள்ள பழைய பழக்கங்களும் மரபுகளும் கைவிடப்பட்டு வருகின்றன. திருமண நிகழ்ச்சிகள் எளிதாக்கப்பட்டு வருகின்றன. இதற்கு மூலகாரணம் பொருள்களின் விலை உயர்வே ஆகும். இத்தனை நூற்ருண்டு காலமாகப் பழக்கத்திலிருந்து வந்த கூட்டுக் குடும்பமுறை படிப் படியாக மறைந்து வருகிறது. கணவன், மனைவி, குழந்தைகள் அடங்கிய தனிக்குடும்பமுறை மெதுவாகத் தலையெடுக்க ஆரம்பித்துள்ளது. இத்தகைய மாறுதல்களுக்கான காரணங்களை ஆய்வது நமக்குத் தேவை இல்லை. குடும்ப அமைப்புகளிலும் திருமணம் நடைபெறும் நடைமுறையிலும் இத்தகைய பயங்கர மாற்றங்கள் ஏற்பட்ட போதிலும், அவை அடிப்படையாகவும், பயனுள்ள காரியத்தைச் செய்வனவாகவும் உள்ளன. தனிமனிதனது பாலுணர்வின் அடிப்படையிலமைந்த வாழ்வைக் குறிப்பிட்ட வரையறைக்குக் கட்டுப்படுத்தி வைப்பது திருமண வாழ்வும் குடும்ப

வாழ்வும் ஆகும். இது தவறான தொடர்புகளிலிருந்து தடுத்து நிறுத்துகிறது. திருமண உறவுகளால் பிறந்த குழந்தைகளுக்கு அன்பும், ஆதரவும் அளிக்கப்படுகிறது. வரையறுக்கப்பட்ட முறையில் அவர்கள் கல்வியின் பயனைப் பெறுகின்றனர். அவர்கள் தாய்மார்கள் வாழ்வினை அமைப்பதற்காகச் சம்பாதிக்கும் வகையில் போதுமான பயிற்சி பெறுகின்றனர். அதனால் அவர்கள் குடும்பத் தலைவர் ஆகின்றனர். பெற்றோர்கள் புத்திக்கூர்மையுடைவர்களாகவும், நற்பண்பினர்களாகவும் இருந்தால், அக்குணங்கள் குழந்தைகளிடமும் உருவாகின்றன, சமுதாயத்திற்கான குணங்களின் நல்லொழுக்கங்களின் அடிப்படையில் குடும்பம் இக்குழந்தைகளை உருவாக்குகிறது. இவையெல்லாம் குடும்ப, திருமண அமைப்புகளின் கோட்பாடுகளும், மரபுகளுமாக உள்ளன.

இங்கு நாம் அவற்றின் வரலாற்று தொடர்பான செய்திகளை விவாதிக்கத் தேவையில்லை. பல்வேறு இடங்களில் அவை செயல்படும் முறை வேறுபாடுகள் பற்றியும் அலசத்தேவையில்லை. பல பெருவாரியான மாறுதல்கள் ஏற்பட்டுக் கொண்டிருந்த போதிலும், இன்னும் பல நல்லொழுக்கக் கோட்பாடுகளுக்காக முக்கியமான அமைப்பு நிலையாக இருக்கும்.

## சொத்துக்களைப் பற்றிய அமைப்பு

இதன் பொருள்களை முழுமையாகக் கைக்கொள்ளுதலும் அவற்றின் பயன்களையும் பற்றிய தலைப்பு என்று கருதக்கூடும். சொத்துரிமை சமூகத்தினால் அளிக்கப்பட்ட உரிமை. இது மனிதர்கள் மிக முக்கியமானதாகக் கருதப்படும் பணம் போன்ற பொருள்களை முற்றிலும் கைக்கொள்ள அனுமதிக்கிறது. இது பொருளைப் பெற்றுக் கொள்ளுவதோடு மட்டுமின்றி, குறிப்பிட்ட வரையரைக்குள் அப்பொருளால் அப்பொருள் வைத்திருப்பவர் விரும்பியபடி எதைச் செய்வதற்கும் உரிமையுடையவராகிறார். இதைச் சமூகம் அனுமதிப்பதுடன் சட்டம் அதன் பாதுகாப்பை உறுதி செய்கிறது. சொத்து என்பது முழுவதும் பணத்தையே கொண்டதன்று. இது நிலம், வீடுகள், கடைகள், கால் நடைகள் போன்றவைகளும் சேர்ந்ததேயாகும். தனிப்பட்டுச் சொத்துரிமையின் அடிப்படையில், பொருள் சேர்க்கும் உணர்வு மனிதர்களின் மிக ஸ்திரமான காரணியாக உள்ளது. தான் எதை மதிப்புள்ளது எனக் கருதுகிறமோ அதைப் பதுக்கி வைக்கும் மனித உள்ளுணர்வு மனிதனுக்கு உண்டு என்ற கருத்தைச் சமீப காலங்களில் நடந்த வருமானவரித்துறையினால் நடத்தபட்ட சோதனைகளினாலும் பணக்

கத்தைகள், தங்கபிஸ்கட்டுகள், வெள்ளிக்கட்டிகள், தங்கவெள்ளி நகைகள் அதிக அளவில் பதுக்கல் மீட்புச் செய்யப்பட்டதிலிருந்து உறுதி செய்யலாம். மனிதனுடைய திடீர் தேவைகளை நிறைவு செய்வதற்கான உபகரணங்களாகவே பணக் கத்தைகளும் தங்கம் வெள்ளியும் உள்ளன என்பதை அறியவேண்டும். பசி, தாகம் தங்குவதற்கு உறைவிடம் போன்ற தலையாய தேவைகளைத் திருப்தி செய்வதற்குத் தங்கமும் வெள்ளியும் பயன்படுத்தப்பட வேண்டும். முடிவுகளிலும் வழிகளிலும் உண்மையான குழப்பங்கள் ஏற்படு கின்றன. பலப்பல நிகழ்ச்சிகளில் வழிகளே முடிவுகளாகவும் இருக்கின்றன. பணம் ஒருவனுடைய பசியையும் தாகத்தையும் நிறைவு செய்ய முடியாவிட்டாலும் பணம் பணத்துக்காகவே அதன் மதிப்பைப் பெறுகிறது. ஆனால், பணம் வாழ்க்கையின் தேவைகளை வாங்குவதற்கும் பயன்படுகிறது. அத்துடன் அதிகப் பணம் இருந்தால் துன்பங்கள் குறைவதற்காக வாய்ப்புகள் குறைவாக்கப் பட்டுள்ளன. பணம் ஈட்டுவதன் சார்பாக கூறப்படும் விவாதத்தின் உள்ளுணர்வின் தர்க்க ரீதியாக இது அமைந்துள்ளது. பணம் வளர்கிறது. எனவே, பணக்காரன் மேலும் செல்வனாகிறான். இவ்வாறு பணம் ஒரு சில குடும்பங்களில் குவிக்கப்படுகிறது. இதனால் சமுதாயத்தில் மிகப்பெரிய சமூகப் பிரச்சனை உருவாகிறது. சமுகவியலாரும் பொதுவுடைமை வாதிகளும் இத்தகைய ஒழுங்கற்ற பணப்பங்கீட்டைத் தீர்க்கும் சஞ்சீவியாகத் தங்களுடைய கோட் பாடுகளைப் போதிக்கிறார்கள். ஆனால், எவ்வளவு தூரம் அவை உண்மையான தீர்வாக இருக்கும் என்பதைக் காலந்தான் காட்ட முடியும். தனிப்பட்டவரின் சொத்துகள் கண்டனத்துக்குரியவை அல்ல என்பதை நாம் நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும். ஒவ்வொருவரும் கடினமாக உழைக்கவும் பணம் ஈட்டவும் அதைச் சேமித்துவைக்கவும் உரிமை உள்ளவர்கள். அவ்வாறனச் சேமிப்பு கள் மிகப் பெரிய அளவில் ஏற்பட்டு அதனால் சமுக அநீதியோ அல்லது மிகப் பெரிய ஏழை பணக்காரன் என்ற ஏற்றத்தாழ்வுகளை உண்டாக்குவதாகவோ இருக்கக்கூடாது. இது போன்றவைகளைப் பொறுத்தவரையிலான அடிப்படைக் கருத்து ஒருவரும் வறுமை நிலையில் இருக்கக்கூடாது; அல்லது அதற்குக்கீழே செல்லக்கூடாது; உணவுத் தட்டுப்பாட்டினால் பட்டினி இருக்கக்கூடாது என்பதாகும். இச்சூழ்நிலையில் காந்தியடிகள் பணக்காரன் என்பவன் தன்னு டைய சொத்திற்குத் த்ருமகர்த்தாவைப் போல் அமைந்து மக்களு டைய பொதுநலவாழ்விற்குக் காவலனாகவும் இருக்கவேண்டும். என்று குறிப்பிடுகிறார். இந்து தருமத்தின்படி சொத்து என்பது பொது நலனுக்கும் பொதுச் சொத்தினால் ஏற்படக்கூடிய நலனுக்கும் அதை வைத்திருப்பவர்களின் உரிமைக் கட்டளையாக இருக்கிறது.

பாகவதத்தில் இவ்வாறு கூறப்படுகிறது. நம்முடைய பசியினைப் போக்கும் அளவிற்கு நமக்குச் சொத்தின்மேல் உரிமை உள்ளது. அதற்கு அதிகமாக எவரும் ஆசைப்பட்டால் அவன் ஒரு திருடன்; தண்டனைக்குரியவன். ஒரு மனிதன் தனிப்பட்ட சொத்துக்களை வைத்து கொள்ள உரிமையும் பெறுகின்ற நேரத்தில் சமுதாயத்திற்கு அவன் செய்யக்கூடிய தொண்டுகளை வெளிப்படுத்தும் உரிமையும் உள்ளது. அதை எவ்வாறு அமல் செய்வது என்பது அரசின் பிரச்சனையாக உள்ளது.

## கல்வி நிறுவனங்கள்

இதுவரை நாம் கற்ற இம்மூன்று நிறுவனங்கள் அடிப்படையானவைகளாகக் கருதப்படுகின்றன. இவை சமுதாயத்தின் சக்கரம் போலச் செயல்படுகிறது. இவை இந்நிறுவனத்தின் பட்டியலைத் தீர்த்துவிடாது. ஏனென்றால் இப்பத்தினுடைய பொருளை மிக விரிவாக அறிந்து கொண்டால் அதன் சாராம்சம் சந்தோசத்தில் முடியக்கூடிய ஏதாவதொரு குறிப்பிட்ட குறிக்கோளின் மேம்பாட்டையோ அல்லது எல்லோருக்கும் பொதுவான விரும்பத்தக்கவையோ அடையப் பாடுபடும் உறுப்பினர்கள் அடங்கிய குழுவை நாம் சமூக அமைப்புகள் எனக்கருதி, தேவை எனவே, பள்ளிகள் கல்லூரிகள் தொழில் நுட்ப நிலையங்கள், கிராமப்புறப் பள்ளிகள் ஆகியவைகளும் இந்த வகைகளுக்குட்பட்டதாகும், குறிப்பிட்ட காலம்வரை இளைஞர்கள், இத்தகைய நிறுவனங்களில் அங்கத்தினராக இருக்க முடியும். அவர் கல்வி முடிவடையும்போது, அவ்வுறுப்பினராக இருக்கும் நிலையும் முடிவடைகிறது. கல்வியில் சரியான கோட்பாடுகள் குறிக்கோள்கள் என்பது என்ன? இது குறித்து இழை இழையாக விவாதங்கள் நடைபெற்று வந்த போதிலும், எல்லோரும் ஒப்புக் கொள்ளும்படியான முடிவு—தீர்வு ஒன்றும் கண்டுபிடிக்கப்படவில்லை. கல்வி என்பது தொடர்ச்சியான ஒன்று. ஆனால், கல்வியில் வேறுபட்ட நிலைகள் உள்ளன. ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்குச் செல்வதில் கல்வியினுடைய நோக்கம் மாறுபடுகிறது. அடிமட்டத்தில் மூன்று (ஆர்) களை அதாவது "படித்தல், எழுதுதல், கணிதம்" ஆகியவைகளைப் படிப்பதோடு நின்றுவிட்டது. மற்றொரு வகையில் கூறப்போனால், நம்மைச்சுற்றியுள்ள கொடுக்கல், வாங்கல் பற்றிய தொழில்முறைபற்றிய முறைகளை அறிந்து கொள்வதற்கான முறைகளை அறிந்து கொள்வதுமட்டுமே போதுமானது. இதற்கு அடுத்த நிலையில், குழந்தைகள் கவலைப்படும் திறமை வளர்க்கப்

படுகிறது. ஆசிரியர்கள், மாணவர்களுடைய திறமைகள் எங்குள்ளன எனக்கண்டுபிடித்து அவற்றை ஊக்குவிக்க முயற்சி செய்ய வேண்டும். அதேசமயம் சில தொழில்களைக்கற்றுக் கொண்டு, அவர்களுடைய வாழ்க்கைக்குத் தேவையானவைகளைச் சம்பாதித்துக் கொள்ளக் கற்றுக் கொடுக்கவேண்டும். அரசின் நாட்டின் பிரச்சனைகளை அறிந்து கொள்வதும் அதனைத் தீர்க்கும் நல்ல வழிகளைத் தெரிந்துகொள்வதற்கும் ஆன நல்ல பயிற்சியை மாணவர்களுக்குக் கொடுக்க வேண்டும். ஒரு பொதுவானதாகவே உள்ளது. எல்லாவற்றையும் விட முக்கியமானது அவர்கள் எவ்வாறு சரியாகத் தங்களுடைய கடமைகளைச் செய்யவேண்டும் என்பதைக் கற்றுக் கொடுக்கவேண்டியதாகும். இந்நிலையில் அதிகமான மாணவர்கள் படிப்பிலிருந்து வெளியேறிவிடுகிறார்கள். உயர்மட்டங்களில், அறிவைப் பெருக்குதலும், அறிவினைப்பற்றி, ஆய்வுகளிலீடுபடுவதையும் கொள்கையாக இருக்கலாம். ஏட்டுக் கல்விக்கும் செய்முறைக்கல்விக்குமிடையேயான ஒரு நல்ல இனிய கூட்டு கண்டுபிடிக்கப் படவேண்டும். நாட்டின் நலனுக்காக அறிவியல் செயல்கூறுகளையும் தொழில்நுட்பங்களையும் இணைத்திடல் வேண்டும். எப்படியாயிலும், எந்தக் கல்வியாளரும் கல்வியின் குறிக்கோள் என்னவென்று இறுதியாகக் கூறவில்லை.

கல்வி நிறுவனங்கள் என்ற தலைப்பில் இது தொடர்பாக, எடுத்த எடுப்பிலேயே தெளிவாகத் தோன்றுதபோதிலும், இன்னும் சில விரிவுகளை உண்டாக்க நாம் முயலலாம். யுகயுகாந்திரங்களாக கல்வி நிறுவனங்கள் நமது நாட்டின் மிக உன்னதமான இடத்தைப் பெற்றுள்ளது. அவை பழங்கால அரசுகளால்கூட ஆதரிக்கப் பட்டு வந்தன. குருகுலமுறை பழங்காலத்தில் கல்வியின் அடிப் படையாக இருந்தது. அதற்கும் மாணவன் கற்பிக்கின்றவாறு குடும்பத்தின் உறுப்பினராகக் கருதப்பட்டான் ஆசிரியருக்கு, மிகவும் பணிந்து நடத்தல் என்பது, மாணவர்களுடைய எல்லா நடவடிக்கைகளிலும் குறிப்பிடத்தக்கது. கற்பிப்பவர் குடும்பத்தின் தலைமைப்பதவியைப் பெற்றார். சில ஆசிரியர்கள் 1000க்கும் மேற் பட்ட மாணவர்களைக் கொண்டிருந்தார்கள் குறிப்பிட்ட 12 ஆண்டு காலப் படிப்பிற்குப் பிறகு ஆசிரியர் மாணவனை வீட்டிற்குப் போக சம்மதித்தது, அதன் பிறகு குடும்பவாழ்வில் ஈடுபட அனுமதி தார், சரித்திரகாலங்களில் உயர்கல்வியும் மிகச் சிறந்திருந்தது. சீனு போன்ற தூர திசை நாடுகளிலிருந்துகூட மாணவர்கள் வந்து படிக்கும் அளவுக்குப் பல பல்கலைக்கழகங்கள் சிறந்திருந்தன. மிதிலை, நாலந்தாப் பல்கலைகழகங்கள் மிகச் சிறந்த சான்றுகளாகும்.

தற்கால நவீன நிறுவனங்களை எடுத்துக்கொண்டால் அவை வியாபார அடிப்படையில் கல்வியைப் புகட்டும் நிலையங்கள் அல்ல என்பதை எடுத்த எடுப்பிலேயே நாம் அறிந்து கொள்ளவேண்டும். ஆனால் அவை இவற்றிக்கு மேலாகவும் உள்ளது. மாணவன் பிற்காலத்தில் பங்குபெற வேண்டியுள்ள பரந்த உலகிற்கும் தன் வீட்டிற்கும் இடையில் அமைந்ததாக செயல்படுகிறது. எனவே, பள்ளிகளும் கல்லூரிகளும், கல்வியைப் போதிக்கின்ற கோவில்களாக இயங்குவதோடன்றி, தன் பிற்கால வாழ்க்கையில் நன்மைபயக்கின்ற நற்பழக்கங்களையும் பெற்றுத்தரும் ஒழுக்கத்தையும் உறுதிப்படுத்துவதோடு அமைகிறது. சுற்றுப்புற சூழ்நிலைகளுக்கேற்பச் செயல்படும் நல்ல வழிமுறைகளையும் நற்பழக்கங்களையும் தருவது பள்ளி கல்லூரிகளில் ஏற்படும் நல்லொழுக்க வழியினாலான வாழ்வு. இவற்றைக் கருத்தில் கொண்டுதான் சட்டங்களும் விதிமுறைகளும் ஏற்படுத்தப்படுகின்றன. தன் பிற்கால வாழ்வில் ஏற்படக்கூடிய மிகப் பெரிய நன்மைக்கா, தற்போது ஏற்படும் பல சிரமங்களையும் அவன் தாங்கிக் கொள்வது அவசியமாகிறது. பள்ளிக்கும் கல்லூரிக்கும் குறித்த நேரத்தில் வரும் பழக்கத்தை ஒருவன் ஏற்படுத்திக் கொண்டானேயானால், இப்பழக்கம் அவன் பிற்கால வாழ்வுமுழுவதிலும் தொடர்கிறது. இது போன்ற வழிகளில் ஆழ்ந்தயோசனை, சிறிய தனித்தனியான பிரச்சனைகளை முழுவதும் திறமையாகக் கையாளுதல்' தன்னம்பிக்கையும் இன்னும்பிற இது போன்ற நற்பழக்கங்களை சிறுவயதில் உண்டாக்கிக்கொள்ள உதவும், அது பிற்கால வாழ்க்கையில் தெளிந்த படிவங்களாக அமைகின்றன. அமைந்து அவனுக்கு நற்பயனே அளிக்கின்றன. இம்முறை பயிற்சிமாற்றம் என்று உளவியல் வல்லுநர்களால் அழைக்கப்படுகிறது. இவ்வாறு எவ்விதப் பயனுமின்றி பள்ளி, கல்லூரி வாழ்க்கையின் போக்கிலே போவதைவிட நன்கு கற்றல், யோசனை செய்தல், பிறருக்கு உதவியாக இருத்தல் போன்ற நற்பழக்கங்களை வளர்ப்பதோடு எதையும் தீவிரமாக எடுத்துக்கொள்ளும் பழக்கத்தையும் உண்டாக்குவது மாணவர்களுக்கு நல்லது. நற்பழக்கங்கள் பிற்கால வாழ்க்கையில் ஏற்படுவதைவிட இளமையில் மிகவும் சுலபமாக அமைந்து விடுகின்றன. ஒரு அட்டவணையைத் தயார் செய்தல், அவற்றுக்குத் தன்னை உட்படுத்தல், போட்டி மனப்பான்மை குறிப்பிட்ட வழிகளில் தனித்த தன்மையை உறுதியடையச் செய்தல் இழுவுக்கான ஒழுக்கங்களுக்குத் தன்னை உட்படுத்துதல் போன்ற நல்ல பலகுணங்களை வளர்ப்பதற்கும் உருவாக்குவதற்கும் பள்ளிவிடுதிகள், விளையாட்டு மைதானங்கள் போன்றவைகள் மாணவர்களுக்கு மிக முக்கியத்துவம் உடையனவாகக் கருதப்படுகின்றன. இத்தகைய காரணங்களால் மாணவர்களாக

இருக்கக்கூடிய வாழ்க்கைதான் ஒருவனுடைய வாழ்க்கையின் மிகச் சிறந்த காலமாகக் கருதப்படுகிறது என்று இந்த வாக்கியம் அமைந்துள்ளது. எனவே, மாணவர்கள் பயனுள்ள கொள்கைகளைக் கற்றலில் கைக்கொள்ள வேண்டும் என்றும் கூறுவது மிகவும் அவசியமாகிறது.

## பயனுள்ள கல்வியும் வாழ்வும்

நம்மில் பெரும்பாலோர் வாழ்க்கையின் பிரச்சனைகளையும் வாழ்க்கையினை அணுகுகின்ற முறையிலும் எத்தகைய மனப்பாங்கையும் பெறவில்லை. நம்முடைய தினசரி வாழ்க்கையிலும்கூட ஒருகுறிப்பிட்ட கொள்கையையோ அல்லது குறிக்கோளையோ கொண்டு நம் செயல்களை அதன்வழியில் வாழ்க்கையினை அமைத்துக்கொள்ளவோ பெரும்பாலோர் முயல்வதில்லை. நம்மை நேரிடையாகப் பாதிக்காத விஷயங்களைப் பொறுத்தவரை நாம் கவலையற்றவர்களாக இருக்கிறோம். ஆனால், அவை நம்மை வெகுவாக பாதிக்க முற்படும்போது வெற்றி கொள்ள மிகவும் கடினமாக உழைக்க ஆரம்பிக்கிறோம். பொதுவாக நாம் நம்முடைய முழுத் திறமையையோ அல்லது தகுதியையோ வெளிப்படுத்துவது இல்லை. மற்ற மக்களுடன் சாதாரண முறையிலே வாழ்க்கை முறையை அமைத்துக்கொள்வதோடு திருப்தி அடைந்து விடுகிறோம். இது மிகவும் தவறானதும் அதிருப்தி அளிக்கக்கூடியதுமான முறை என்பதையாரும் மறுக்க முடியாது.

ஒவ்வொருவரும் வாழ்க்கையினுடைய முக்கியத்துவத்தையும் நோக்கத்தையும் அறிந்திருக்க வேண்டும். போற்றுதற்குரிய குறிக்கோள்களையும் மிக உயர்ந்த எண்ணங்களையும் கொண்டிருக்க வேண்டும். மனிதன் பகுத்தறிவைப் பெற்றுள்ளான். அவன் எது அநீதியானது எது நீதியானது, என்பதைத் தேர்ந்து அறியும் திறமை உடையவனாக இருக்கிறான். முதன்மையான ஒழுக்க நியதிகளைப் பின்பற்ற வேண்டும், தன்னால் முடிந்த அளவிற்குச் சரியானவைகளைப் பாதுகாத்து அநீதியையும் கெட்டவைகளையும் எதிர்த்துப் போராட வேண்டும். சில மனிதர்கள் தங்கள் வாழ்வினுடைய செயல்களிருந்து ஓய்வு பெறுவதற்கு முன்னதாக மிகப் பெரிய பணக்காரனாக வேண்டுமென்ற குறிக்கோளைத் தமக்கு முன்பாக ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். இத்தகைய குறிக்கோள் மிகவும் திருப்திதரக்கூடியது அன்று. ஏனெனில் இத்தகைய குறிக்கோளினால் மற்றவர்களுக்கு எந்தவிதமான இலாபமோ அல்லது உதவியோ கிடைக்காததோடு ஒருவருடைய தன்னலத்

தையே சார்ந்ததாக இருக்கிறது. இத்தகைய மனப்பாங்குக்குத் தத்துவப்பயிற்சி தேவை. அது மட்டும் தன்னைச் சுற்றியுள்ள பல செயல் வட்டங்களில் ஒருவனை ஆர்வமுடையவனாக இருக்கச் செய்கிறது. அத்துடன் அவற்றினுடைய மதிப்பையும் தகுதியையும் கணிக்க உதவுகிறது. மற்றவர்களுடைய நலனை முன்னேற செய்வதற்கும் தன்னைச் சுற்றியுள்ள அயலார்களைத் தன்னால் முடிந்த அளவிற்கு உயர்த்தவும். அவர்களுடன் எப்பொழுதும் ஒத்துழைக்க வேண்டும். நாம் எல்லோரும் நம்முடைய வாழ்க்கையை மையமாகக் கொண்டுள்ள பல நிறுவனங்களிலிருந்து பட்டங்கள் பெறவும் வாழவும் செய்கிறோம். நாம் காலத்தை கழிக்கும் பல நிறுவனங்களில் பயனுள்ள வாழ்கையை நாம் வாழ்ந்தால் நல்ல பல பாடங்களைக் கற்றுக் கொள்ளலாம். அன்பு, பாசம், கடமையுணர்வு இது போன்ற பல குணாதிசயங்களை ஒரு தனிமனிதன் வளர்த்துக் கொள்வதற்குக் குடும்பம் மிகவும் சரியானதாக இருக்கிறது. ஆனால் இத்தகைய வளர்ந்துவிட்ட குணங்கள் மிகக்குறுகலாக அமைந்து விடாதபடியும் அக்குடும்பத்திலிருக்கக்கூடிய உறுப்பினர்களுடன் மட்டும் குறுகி விடாதபடியும் நாம் பார்த்துக் கொள்ளுதல் வேண்டும். நம் குடும்பத்தவராக இல்லாத போதிலும் அவர்களிடமும் நம்முடைய அன்பு, பாசம், கடமையுணர்வு ஆகியவை விரிந்திருக்கவேண்டும். இத்தகைய குடும்ப நலன்கள் எல்லா நேரங்களிலும் எல்லா இடங்களிலும் கடைப்பிடிக்கப்பட வேண்டும். பொருளாதார வட்டத்தில் இவை மங்கலாம். ஆனால், அதே சமயம் திறமை, நேர்மை போன்ற நற்குணங்கள் உருவாக்கப் படவேண்டும். ஒருவன் கோயில்களிலோ அல்லது வீட்டிலோ வழிபாடு செய்யும்போது ஆன்மிக செல்வாக்கு மேலானதாக இருக்கவேண்டும். மற்ற நற்குணங்களோடு அது மிக நெருங்கிய தொடர்புக் கொண்டு மற்றவைகளை விட மேலானதாக இருக்க ஆளுதல் வேண்டும். இவ்வாறு ஒரு மனிதன் ஒரு சூழ்நிலையினுடைய உண்மையான முக்கியத்துவத்தை அறிந்து கொள்ள வேண்டும் எப்பொழுதும் நற்குண நற்செய்கைகளில் நடத்தல் வேண்டும். எப்பொழுதெல்லாம் தன் சுயநலத்திற்காக வலியோரைச் எளியோரைச் சுரண்டுகிறார்களோ எப்பொழுதெல்லாம் அநீதியின் கை ஓங்குகிறதோ எப்பொதெல்லாம் தெய்வீகம் அல்லது நன்னடத்தை மறைக்கப் படுகிறதோ இது நம்மைப்பொறுத்து அன்று என்று எண்ணாமல் நீதிக்கும் நல்லொழுக்கத்திற்கும் பக்கமாக ஒருவன் நிற்க அறிந்து கொள்ளவேண்டும். உண்மை, நன்மை, அழகு ஆகியவைக்களுக்கான மதிப்பை நாம் உருவாக்குதல் வேண்டும். மற்ற நல்லியல்புகள் அதைப் பின்பற்றும்.

அத்தியாயம் – 6

# இந்தியாவின் கடந்தகால- இன்றைய- நிலை

## இந்தியாவின் பெருமை

இந்த அத்தியாயத்தில் நமதுஇந்தியாவின் பெருமைக்குரிய கடந்த காலத்தையும் அதன் தற்போதைய நிலையையும் பற்றிப் பார்ப்போம். இந்திய சரித்திரத்தின் பல்வேறு நிலைகளில் மொழிகள், சமூக அமைப்புகள் சமய, பழக்க வழக்கங்கள், நடத்தைகள் ஆகியவற்றைப்பற்றிப் படிக்கக்கூடிய நடுநிலை மாணவர்கள் நம்முடைய நாட்டின் தனித் தன்மை வாய்ந்த ஒரு சக்தி நம்முடைய பழம் பெருமைக்குக் காரணமாக இருக்கிறது என்பதையும் அது இன்றளவும் நமது கலாச்சாரத்தையும் அமைப்புகளையும் அழியாமல் காத்து நிற்கிறது என்பதையும் முடிவாக அறிந்து கொள்கிறுர்கள். கிரீக், ரோம் ஈரான், எகிப்து போன்ற நாடுகளின் பழம்பெருமை வாய்ந்த சரித்திரங்களைப் படிக்கும்போது அவை பழங்காலத்தில் அரசியல் கலாச்சார மையங்களாகத் திகழ்ந்தபோதிலும் அவற்றினுடைய பழம் அரசியல் பெருமையும் கலாச்சார பெருமையும் தற்போது நிலைத்து நிற்கவில்லை என்பதையும் நாம் அறிகிறோம்.இவ்வாறு அவற்றின் பழமைக்கும் தற்போதைய நிலைமைக்கும் இடையில் ஒருபெரிய இடைவெளி உள்ளது. ஆனால், இந்தியாவைப் பொறுத்தமட்டில் எப்பொழுதும் இந்நிலை இருந்ததில்லை. அண்டைநாடுகளைப் போர்களில் தோற்கடித்தோ பழைய ரோமாபுரியைப் போலத் தனது இராச்சியத்தை விரிவுபடுத்தியோ அரசியலில் ஒரு பேருருவம் படைத்ததாக இந்தியா என்றும் இருந்ததில்லை. ஆனால், இந்தியாவினுடைய கலாச்சாரம், மதம், சமூகப் பழக்கங்களைப் பொறுத்தமட்டில் மிகப் பழங்காலங்களிலிருந்தே தொடர்ச்சியாகச் சில மாற்றங்கள் ஏற்பட்டுக் கொண்டே இருந்தன. நம்முடைய வாழ்க்கையின் மையமாக மதமே இதுவரை அமைந்துள்ளது. நமது கலாச்சாரம், மதம், நாகரிகம் ஆகியவை சரித்திரத்தை மிக நீண்ட காலமாகப் பல மாறுதல்களுக்கு உட்படுத்தியுள்ளன. ஆனால், அதன் மையமானது உறுதியானதாகவும் நிலைத்து நிற்கக் கூடியதுமாக இன்றும் உள்ளது. இரக்கமில்லாமல் கொள்ளையடிக்கும் மனப்பாங்கோடு இமயத்தைக் கடந்தும் மேற்குப் புறமுள்ள கடல் கடந்த நாடுகளில் இந்தியா பல

முறைதாக்கப்பட்டும் கொள்ளையடிக்கப்பட்டும் இருந்தபோதிலும், மற்ற நாடுகளில் நிகழ்ந்ததைப்போல இந்தியாவின் கலாச்சாரமும் மதமும் மறைந்து விடவில்லை. இமயமலைத்தொடர்ப் பகுதிகளான மத்திய ஆசியாவில் இந்தியாவின் மதம், கலாச்சாரம், வாணிகம் ஆகியவற்ருல் நிகழ்ந்த செல்வாக்கு இப்பொழுது தெளிவாகிறது. அப்பொழுது உலகமாகக் கருதப்பட்டவைகளில் இந்தியாவினுடைய கலாச்சாரமும் நாகரிகமும் பழங்காலமாகவே பரப்பப்பட்டுள்ளன. 'இந்து மதமும் புத்தமதமும்' என்ற தமது நூலின் மூன்ருவது அத்தியாயத்தில் சார்லஸ்எலியெட் என்பவர் இத்தகைய தன்மை படைபலத்திஞல் பெறப்பட்டது அன்று என்று கூறுகிருர். இதுஅறிவுப்பூர்மான வெற்றி. இது கருத்துப் பரிமாற்றம்கூட அன்று. ஏனென்ருல் அந்நூற்ருண்டுகளில் ஆரம்பமாக இருந்த மதங்களிலிருந்து எதையும் பெற்றுக்கொள்ள வேண்டிய அவசியம் இந்து மதத்திற்கு இல்லை. இந்துப் பண்பாடு இந்தியாவில் மட்டுமல்லாமல் பிறநாடுகளிலும் பரவியது என்னும் உண்மை வெகுகாலமாக மறக்கப்பட்டு விட்ட போதிலும் இது மிகவும் முக்கியமானதாகும். மங்கிக்கிடந்த இந்த உண்மை நவீனகால ஆராய்ச்சிகளின் வாயிலாகக் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. இது நமது பழம் பெரும் இந்தியப் பண்பாட்டுக்கு மரியாதையையுதவும் வணக்கத்தையும் செலுத்தும் படி ஒவ்வொரு இந்தியன் உள்ளத்தையும் தூண்டி விடுகிறது என்று R. C. மஜும்தார் கூறுகிருர். இதில் விருப்பமுள்ள மாணவர்கள் விவேகானந்தா நினைவுபாதை குழுவினரால் வெளியிடப்பட்டது பல குறிப்பிடத்தக்க எழுத்தாளர்களின் இந்தியாவின் கலாச்சார நாகரிகம் கிறிஸ்துவுக்குப் பிறகும்கூடப் பல ஆசிய நாடுகளில் கொண்டுள்ள தொடர்புபற்றிய கட்டுரைகள் அடங்கிய உலக எண்ணத்திற்கும் கலாச்சாரத்திற்கும் இந்தியாவின் பங்கு என்ற நூலினைப் பார்க்கலாம். பல அகழாராய்வுகளில் கண்டெடுக்கப்பட்ட உருவச்சிலைகளைப்பற்றிய படிப்பும் பிராமி என்ற கையெழுத்துப் பிரதிகளின் கண்டுபிடிப்பும் இதை ஒட்டிய மற்ற மொழிகளும் புதை பொருள் ஆராச்சியின் சான்றுகளும், நாணயச் சான்று முறைகளும் இந்தியாவினுடைய கலாச்சாரம், ஆப்கானிஸ்தான், ஈரான், பெஷாவர் மற்றும்பல சுற்றியுள்ள இடங்களிலும் நிலவியிருந்ததை வெளிப்படுத்துகின்றன. சைவக் கோவில் முன் புத்த கோவில்கள் கட்ட இணங்கியதுசைபீரியா உட்பட்ட அயல்நாடுகளிலும் இருந்தது. கி. மு. 3000 ஆண்டுகளுக்கு முன்பும்கூட இந்தியாவுடன் குறிப்பாக மத்திய ஆசியா, சைஞ, போன்ற பல பகுதிகள் கடல்வழியாகவும் நிலவழியாகவும், தீவிர வணிகத் தொடர்பு கொண்டிருந்தன. கிழக்கிந்தியாவின் பல பகுதிகளும் இதில் அடங்கியிருந்தது. அக்

காலத்தில் இந்தியாவில் உள்ள யானைகள், சிங்கங்கள் போன்ற மிருக வகைகளுக்கும், முத்து, வைரம் வாசனைப் பொருள்களுக்கும் போட்டி இருந்தது. பட்டு, கிழங்குகள் போன்றவை மூலமாக வியாபாரம் விறுவிறுப்பாக நடந்தது. ரோமாபுரி ஒரு மிகப் பெரிய வாணிக நாடாக அமைந்தது. எது கிழக்கிலிருந்தும் மேற்கி லிருந்தும் வருகின்ற கப்பல்கள் சந்திக்கக்கூடிய இடமாகக் கருதப் பட்டதோ அந்த இந்தியாவை ரோமாபுரிக் கப்பல்கள் வந்தடைய நான்கு மாதங்களாயின. மத்திய ஆசியாவுக்கு நிலவழியாக இருந்த இடத்தில் இந்தியர்கள் குடியிருப்புகள் அமைத்துத் தங்களுடைய கலாச்சாரம் மதம், கலை, எழுத்து, மொழி, சமூக பொருளாதார அமைப்புகள் ஆகியவற்றை அந்நாடுகளில் புகுத் தினார்கள். முதன்மையாக வியாபார வழியாக இருந்த போதிலும் இந்தியாவுக்கும் சைனாவுக்கும் இடையில் மதசங்கங்களை நிறுவவும் செழிக்கும் நாடுகளை நிறுவவும் அதில் இந்தியாவினுடைய தன்மை கலாச்சாரத்திலும் மதத்திலும் ஆச்சரியப்படத்தக்க முறையில் காணப்பட்டது. இந்தியர்கள் தங்கிச் செழித்திருந்ததற்கும் தங்கள் வாழ்க்கை அமைத்துக் கொண்டதற்குமான சான்றுகள் இன்றும் அழிவுற்ற நகரங்களில் காணப்படுகின்றன. வடக்கிலும் தாய்லாந்து, இந்தோனேஷியா கிழக்கிலுள்ள மற்ற நாடுகளிலும் மங்கோலியாப் பகுதிகளிலும் கிறிஸ்துவ சகாப்தத்திலும்கூட இந்து, புத்த மதங் களில் குறிப்பாகப் புத்தமதம் மிகவும் முன்னேற்றம் அடைந்தது. இப் பகுதிகளில், பெஷாவர், ஆப்கானிஸ்தான், ஈரான், மங்கோலியா சைபிரியா போன்ற பகுதிகளிலும் விநாயகருடைய உருவச்சிலையும் மற்றத் தெய்வங்களுடைய உருவச்சிலைகளும் கண்டெடுக்கப்பட்டு உள்ளன. இது ஒரு தனிப்பகுதியாக அமைந்துவிட்டதால் இதை பற்றிய விரிவான தகவல்களை நாம் இங்கே தரவில்லை.

## உலக நாடுகளுக்கிடையே இன்றைய இந்தியா

ஒரு நாட்டின் கொள்கைகளையும் சட்டதிட்டங்களையும் மதிக்கின்ற மற்ற நாடுகளிடையே பொருளாதாரத்திலும் அரசியலி லும் நம்முடைய இன்றைய நிலை என்னவென்பதைப் பார்ப்போம் ஆங்கிலேயர் ஆட்சியினால் ஏற்பட்ட ஒரு நன்மை என்ன வெனில் நாம் ஒரே அரசியல் அடிப்படையிலே ஒன்று சேர்க்கப் பெற்றோம். இது ஒருவகையில் சாதகமானதுதான். இந்தியா எப்பொழுதும் மதத்தின் காரணமாகவும் பண்பாட்டின் காரணமாகவும் ஒன்றாகவே கருதப் பெற்றாலும் நமக்குள் பழைய அரசர்களிடையே அடிக்கடி தங்கள் தங்கள் ஆக்கிரமிப்பிற்காகச் சண்டை ஏற்பட்டு அந்நிய ஆட்சிக்கும் சூறையாடுதலுக்கும் மதமாற்றத்திற்கும் எளிதில்

ஆளாக நேர்ந்தது பெரும் சாம்ராச்சியங்கள் சிறப்புற்றிருந்தாலும் (பழங்காலத்தே இருந்த போதிலும்) இன்று நாம் 'இந்தியா' என்று அழைக்கப்படுகின்ற ஒரு தனி நாடாக இருந்ததில்லை. முழு இந்தியாவை அவை ஒருமித்து இணைத்துக் கொண்டதாக இல்லை. ஆங்கிலேயரிடம் இருந்து உரிமை பெற்ற பிறகு சிறு சிறு தீவுகள் போன்றிருந்த நம் இந்தியா ஒன்றாக்கப்பட்டது. இன்று எல்லா மக்களும் ஒரே அடிப்படையின்கீழ் இந்தியக் குடிமக்களாகத் திகழ்கின்றனர். இதற்கு மாறாகப் பிரதேசப் பற்றும் தனித்து எண்ணுகின்ற எண்ணங்களும் குறுகிய மனப்பாங்கும் நம்மிடையே அதிகமாக இருப்பாகத் தோன்றுகிறது. மத்திய மாநில அரசுகள் நமக்கு நிலையான தன்மையைக் கொடுத்திருப்பது நமக்கு நன்மையேயாம்.

அனைத்து உலக வாணிகக் கண்கொண்டு பார்த்தால் இந்தியா மிக அதிகமான வாணிக லாபத்தை அனுபவிக்கிறது. ஆனால், மக்களில் அறுபது சதவிகிதம் அல்லது அதற்கு மேற்பட்டோர் ஏழ்மை நிலையிலோ, அதற்குக் கீழோ இருக்கிறார்கள் என்றும் கூறப்படுகிறது. இந்நிலையைப் போக்குவதற்காக எல்லாவித முயற்சிகளையும் அரசு எடுத்துவருகிறது. ஆனால், பிரச்சனையோ மிக மிகப் பெரியது. இந்தப் பிரச்சனை எப்போதாவது தீர்க்கப்படும் என்பதை நிச்சயமாகச் சொல்வதிற்கில்லை.

மக்களின் சமய நடைமுறையில் ஒரு குறிப்பிட்ட மாற்றத்தை இப்போது நாம் பார்க்கிறோம். இது குறைந்து வரும் ஆண்மிகக் காரணக் கூறுகளை பிரதிபலிக்கவில்லை. ஆனால், வாழ்வுக்குத் தேவையான விஷயங்கள் ஆன்மிகக் கருத்துக்களைப் பின்தள்ளி, முன்னேக்கி வருவது தெளிவான உண்மையாகின்றது. சமூக அமைப்புகளில் மக்களைக் கட்டாயப்படுத்துவது நீங்கி, பழக்கவழக்கமான செயல்களிலே மக்கள் தன்னிச்சையாக இருப்பதைப் பார்க்கிறோம். மனிதர்களுக்குள் சாதி மத வர்க்க பேத மற்ற சமுதாயத்தை உருவாக்குவதில் சீர்திருத்தவாதிகள் கொண்ட நோக்கம் மனிதர்களிடையே இருக்கும் சமத்துவமில்லாமையைக் குறைக்கும் சக்தி கொண்ட தூண்டுதலாக இருந்தது. சமபந்தி போஜனம் கலப்புத் திருமணம் ஆகியவைகளைத் தடுப்பது குறைந்து வருவது சமுதாயக் கட்டுப்பாடுகளைக் கட்டாயமாக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் செயல்படுவதாக இல்லாமல் பெருகிவரும் பொருளாதார நெருக்கடியால் ஏற்படுகிறது. பொருளைச் சேர்ப்பது என்ற ஆசை பிரதானமாக இருப்பதால் நல்லொழுக்கங்களும் எண்ணங்களும் பின்நோக்கித் தள்ளப்படுகின்றன. நல்லொழுக்கத்தின் நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்ட நல்லியல்புகள் மெது

வாகப் பின் நோக்கித் தள்ளப்பட்டு அதன் சாரத்தை விட்டு விட்டு, புறத்தோற்றத்தையே பின்பற்றுகிறோம்.

மேலும், ஒரு தனி மனிதனின் வாழக்கையில் மட்டு மல்லாமல் ஒரு நாட்டின் சரித்திரம், கலாச்சாரம்,நாகரிகம் ஆகியவற்றிலும் ஒரு சூழல் மாற்றம் ஏற்படுகிறது. ஆங்கில, முகமதிய ஆட்சிகளின் தோற்றம் முதல் 19ஆம் நூற்றுண்டின் இடைக்காலம்வரை இந்தியா பல வெளிநாட்டுப் பண்புகளுடன் தொடர்பு கொண்டுள்ளது. அதன் பயனுக, ஒரு சாராசரி இந்தியன் படிப்படியாக ஆங்கிலக் கலாச்சார மோகத்தில் ஈடுபட்டு, தன்னுடைய சொந்த கலாச்சாரத்தை அலட்சியப் படுத்தலானுன். ஆனுல், அதிர்ஷ்டவசமாக 19 ஆம் நூற்றுண்டின் இடைக் காலத்தில் தோன்றிய பெரிய இயக்கங்கள் இந்தியப் பழைய கலாச்சாரத்திற்கு உயிரூட்டின. பிரும்ம சமாஜமும் ஆரியசமாஜமும் போன்ற இயக்கங்கள் இதற்குச் சில எடுத்துகாட்டுகள். சமூகத்தில் பெண்களுக்கு விடுதலே, மதக்கோட்பாடுகளாக இருந்த ஜாதி முறைகளே ஒழித்தல், கல்வியைப் பரப்புதல், பலதரப்பட்ட அறச்செயல்களேச் செய்தல் இவைகளெல்லாம் உற்சாகமா கப் பரப்பப்பட்டுச் செயல்படுத்தப்பட்டுள்ளன. இந்து மதத்திலும் கூட சுவாமி விவேகானந்தரின் செல்வாக்கும், அவருடைய மேன்மைமிக்க குருவான ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரின் இந்து சமயத்தின் கோட்பாடுகளின் செயல்முயற்சிகளிலும் இருந்து சிதறிப்போன தவறுன கருத்துக்களே நீக்குவதில் மந்திரம்போலச் செயல்பட்டது. ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனேச் சேர்ந்த மேன்மை மிக்க சீடர்கள் மதத்தைப் பின்பற்றிய சரியான கருத்துக்களேப் பரப்புவதில் முனேந்துள்ளனர். அதே சமயம் வெள்ளம், பூகம்பம், பஞ்சம் போன்ற மிகப் பெரிய அழிவுகளுக்குட்பட்டுத் தொல்லேயுறுவோர்க்கு உதவி செய்கின்றனர். காந்தியடிகள் அஹிம்சையின் தூதராக இருந்தார்.

காந்தியடிகள் அஹிம்சா மூர்த்தியாக விளங்கி, இந்தியாவுக்கு ஆங்கிலேரிடமிருந்து அரசியல் விடுதலேயை வாங்கித் தருவதில் வெற்றிகண்டார். இந்தியர்களிடையே முன்பு குறைவாக இருந்த தேசிய உணர்வையும், நாட்டைப்பற்றிய மதிப்பையும், அதிகமாக ஊட்டினுர். ஆச்சாரிய விஞேபாபவே ஏற்படுத்திய சர்வோதய பூதான இயக்கம் நிலமற்றவர்களுக்கு நிலம் வாங்கிக் கொடுத்து, புனர் வாழ்வு நல்கி நற்றெண்டு செய்துள்ளது. இந்த எல்லா இயக்கங்களும் சந்தடியின்றி அமைதியான வட்டாரத்தில் தன்னலமில்லாது தம்மையே ஈடுபடுத்திக்கொண்டு செய்துவந்த இம் மகான்களும் பெருந்தலேவர்களும் இந்தியாவை எக்கோணத்திலிருந்துபார்த்தாலும் ஒளிமயமான எதிர்காலத்தைக் கொண்டுள்ளது.

## தேசபக்தி

தேசபக்தி என்பது தன் தேசத்தை நேசிப்பதும் அதனுடைய உயர்ந்த பண்பாட்டிற்கும் சமுதாயத்திற்கும் ஏற்ப நடந்து கொள்வதேயாகும். ஒவ்வொரு மனிதனையும் கவர்கின்ற நல்ல பண்பு இது. இந்த விஷயத்தில் இதை ஒரு உலக உண்மையாக விவரிக்கலாம். இது ஒருவனுடைய பிறந்த நாட்டையும் மதத்தையும் அந்நாட்டின் பண்பாட்டையும் பற்றிய ஆசையைச் சார்ந்தது. ஒருவன் தன்னைப் பெற்ற தாயிடம் கொண்டுள்ள அன்பும் தன்னைப் பெற்ற நாட்டிடம் கொண்டுள்ள அன்பும் சொர்க்கத்தையும் விடச் சிறந்தவை என்று ஒரு வடமொழி சுலோகம் கூறுகிறது. நமது நாடு ஒரு விலைமதிப்பற்ற கருவூலகம். நமது நாட்டின் சுதந்திரமும், அதன் கலாச்சார நாகரிகமும் தூய்மையாய் இருப்பதற்கு நாம் எடுத்துக் கொள்ளக்கூடிய எம்முயற்சியும் எவ்விதத்தாலும் பெரியவல்ல. சாதாரணமாக நாட்டை விரும்புவதால் ஒவ்வொருவனும் தேசப்பற்று உள்ளவன் தாம். ஆனால், சில சமயம் பணமும் மதிப்பும் அவனைத் தேசபக்திக்கு எதிரானவனாக மாற்றித் துரோகியாக்குகின்றது. இது மிகவும் கண்டிக்கதக்கது. ஏனெனில், தனக்குக் கிடைக்கும் நன்மைக்காகத் தம் தேசத்தை அவன் துச்சமாக எண்ணிச் செய்கின்ற செயல் நம்முடன் கூட உள்ள மற்ற எல்லா மக்களையும் கடுமையாகப் பாதிக்கிறது. பணத்திற்காகதேசத்தைக் காட்டிக் கொடுப்பவன் மட்டும் தேசத்துரோகியல்லன். நாட்டின் நலன் வாழ்க்கையைப் பாதிக்கக் கூடியதும் பொருள்கள் கிடைக்காதபோது பொருள்களைப் பதுக்கி வைத்து நாட்டின் முன்னேற்றத்தைத் தடைசெய்யக் கூடியதும் அதிகமாக மக்களைத் தொல்லைப்படுத்துவதுமான செயல்களைத் தெரிந்தும் செய்கின்றவர்களும் இப் பட்டியலுக்குட்படுத்தப் படுவார்கள். இவர்களே நாட்டின் எதிரிகளென்று அழைக்கப் படுவார்கள். கலப்படம் செய்யப்பட்ட பொருள்களை வாங்கி உண்பவர்கள் உடல் ஊனமுற்றும் துன்பத்திற்குள்ளாகிவிடுகிறார்கள் இத்தகைய செயல்களைச் செய்பவர்கள் துரோகிகள்.

## இந்தியப் பழக்க வழக்கங்கள்

இந்தியாவிற்குத் தொன்மையான நாகரிகம் உண்டு. அதன் சிறப்பின் காரணமாக காலங்கள் எவ்வாறு மாறினும் சில பழக்கங்கள் இன்றும் நிலையாக உள்ளன. சிலவற்றை இங்கே காணலாம். சைனாவிற்கு அடுத்தபடியாக நம் நாட்டிலே தான் பெற்றோர்களுக்கும் வயதானவர்களுக்கும் மதிப்புத்

தருகிறோம். இரண்டாவதாக மேல்நாடுகளைப் போல் அதிகமாக இல்லாது போதிலும் பெண்களுக்குத் தக்க மரியாதை தரும்பழக்கம் நம் நாட்டில் பாராட்டுதலுக்கு உரியதாகவுள்ளது. பலதரப்பட்ட இடங்களில் கடவுளுக்கு வணக்கம் செலுத்தும் பழக்கம் அதிக மக்களிடையே காணப்படுவது மிகவும் சிறப்பான பண்பாகவுள்ளது. பரம்பரையாகவுள்ள விருந்தோம்பும் பண்பும் பலரிடம் காணப் படுவது மற்றொரு சிறந்த பண்பாகும். தன்னிடம் உதவி நாடிவரும் பிச்சைக்காரனைத் திருப்பி அனுப்பிவிடும் முன் மிக வறுமையில் உள்ளவன் கூட இருமுறை யோசிக்கிறான். இவை எல்லாம் நமது நாட்டிற்குச்சிறந்த நன்மைகள் தருவன. இந்த நற்குணங்களைப் பாதுகாத்துக் கடைபிடித்து வளர்ப்பதற்கு ஒருவன் முயல வேண்டும்.

## வேற்றுமையில் ஒற்றுமை

இத் தலைப்பின் கீழ் நாம் காணக்கூடிய குறிப்பிடத்தக்க உண்மை என்னவென்றால் பல்வேறு மொழிகள், மதங்கள், கலாச்சாரங்கள், பண்பாடுகள், பழக்கவழக்கங்கள் கொண்டவர் களாக நாம் இருந்தபோதிலும், இந்தியா ஓர் ஒருமித்த நாடு என்பது மிக முக்கியமானதாகும். பொதுவாக, பௌத்தர்கள் சமணர்கள் ஆகியவர்களடங்கிய இந்துக்களே பெரும்பான்மை யான மக்களாவார்கள். இம்மக்கள் பல்வேறு மொழிகளைப் பேசினாலும், பல்வேறு கலாச்சாரமரபுகளைக் கொண்டிருந்தாலும் இந்தியாவின் வட, தென்கோடியில் உள்ளவர்கள் அனைவரும் இந்தியத் தாயின் புதல்வர்கள் என்ற எண்ணமே, அவர்களை ஒன்று சேர்க்கும் சக்தி வாய்ந்த கொள்கையாகும். கிறிஸ்துவர்களும் முகமதியர்களும்கூட, தாங்கள் வேறுபட்ட மதங்களை தழுவியிருந் தாலும் முதன்மையாகத் தாங்கள் இந்தியர்கள் என்றே கருது கிறார்கள். மதங்களிலும், மொழிகளிலும் சிறு வேறுபாடுகள் இருந்தபோதிலும், அவை முக்கியமானதாக வலியுறுத்தப்படுவ தில்லை. இது நாட்டின் அரசியல் ஒருமைப்பாட்டின் ஒரு முக்கிய மான அம்சமாகும். இதைத்தவிர, பல்வேறு பிரிவுகளும், உட்பிரிவு களும் பல்வேறு மத, சமுதாயக் கட்டுப்பாடுகளால் மிகவும் பலமாக நெருக்கமாக ஒருங்கிணைக்கப் பட்டுள்ளன. கோவில்களும், நினைவுச் சின்னங்களும், அவை எங்கிருந்தாலும், மக்களால் பக்தியுடன் வணங்கத்தக்க இடங்களாகின்றன. மேலும், இது மக்களிடையே காணப்படும் கருத்து வேறுபாடுகளையும், வெறுப்புக் களையும் தாக்குகின்ற காரணியாக உள்ளது. கங்கை பிரம்மபுத்ரா,

கோதாவரி, காவேரி, சிந்து போன்ற நதிகள் நாட்டை ஒன்று படுத்துவதில் முக்கியமான அம்சமாக விளங்குகின்றன. எவ்வாறெனில், விழாக் காலங்களிலும், புனித நாள்களிலும், மக்கள் இந்நதிகளில் நீராடி, ஒன்று சேர்ந்து பெருந்திரளாவதற்கும் உரிய யாத்திரிகத் தலங்களாக விளங்குகின்றன. மதம், மொழி, இனம், ஆகியவைகளை முற்றிலும் நீக்கி, அனைவரும் ஒரே மதத்தைச் சார்ந்தவர்கள் என்ற எண்ணத்தை உருவாக்க லட்சக் கணக்கான மக்களை ஈர்க்கின்ற மகாமகம், கும்பமேளா போன்ற நிகழ்ச்சிகள், மதச்சம்பந்தமாக இலக்கியங்களான வேதங்கள் பகவத்கீதை, புனித விவிலியன், புனித குரான் போன்றவை, மக்களை ஒன்று படுத்தும் பாலங்களாக விளங்குகின்றன. வடக்கே தோன்றினாலும், தெற்கில் தோன்றினாலும், எங்கிருந்தாலும் மதத்தலைவர்கள் எல்லோரும் எல்லோராலும் மதிக்கப்படுவதுடன், அவர்களுடைய கருத்துக்கள், எம்மதத்தினராலும், வேறுபாடின்றிப் பின்பற்றப்படுகின்றன. இக்காரணங்களாலேயே, வேற்றுமையில் ஒற்றுமை என்பதை விளக்கி, நம் நாடு ஒரு புண்ணிய பூமி என அழைக்கப்படுகிறது.

### அத்தியாயம்-7

# குடியுரிமை பற்றிய கருத்து

## குடிமகன் என்பவன் யார்

நாம் எல்லோரும் இந்தியக் குடிமக்கள் விதிமுறைகளின் படி ஒரு கூட்டாட்சியாக இருந்தாலும் நமது அரசியலமைப்பு நம் அனைவருக்கும் பொதுவான தொரு குடியுரிமையை வழங்கியுள்ளது. இந்தியாவில் வசிக்கக் கூடிய வரும், இந்தியாவில் பிறந்திருக்கின்றவரும், அவருடைய பெற்றோர்களில் ஒருவர் இந்தியாவில் பிறந்திருந்தாலும் அரசியலமைப்பு ஏற்படுவதற்கு முன்பு சாதாரணமாக ஐந்து வருடங்கள் இந்தியாவில் வாழ்ந்திருந்தாலும், அவனுக்கு இந்தியாவின் குடிமகன் எனக் கூறிக்கொள்ள உரிமை உள்ளது. குடிமகன் என்ற பதத்திற்குச் சரியான பொருள் என்ன? அவனுடைய கடமைகளும் உரிமைகளும் எவை? நாட்டின் அங்கத்தினராக உள்ளவன் சட்டத்தை இயற்றுவதிலும் செயல்படுத்துவதிலும் உரிமை பெற்றவனாகிறான். நாட்டிற்கு வரி செலுத்துவதிலும் விசுவாசமுடையவனாக இருத்தலும் அவனுடைய கடமையாகும். சட்டபூர்வமாக, ஒரு குடிமகன் நாட்டிற்குக் கடமைபட்டவனாகவும், நாட்டிற்குள்ளும் வெளியிலும் அதன் பாதுகாப்பைப் பெறுகின்றவனாகவும் இருக்கின்றான். அவன் சட்டபூர்வமான சுதந்தரத்தையும் சொத்துக்களையும் அனுபவிக்கலாம். அவனுக்கு மாநில வட்டாரத் தேர்தல்களில் போட்டியிடவும் வாக்களிக்கவும் உரிமை உண்டு. அவனுக்குப் பொது அலுவலகங்களில் பொறுப்பு வகிக்கவும் உரிமையுண்டு. குடிஉரிமை என்பதற்கு ஒரு நீதி முறையும் உண்டு. இதை நாம் தெளிவாக விவரிக்க இயலாது. நீதிமுறைக்குட்பட்ட குடியுரிமை என்பது பொது உணர்ச்சியையும் தியாக உணர்வையும் மறைமுகமாகக் குறிப்பிடுகிறது. பொது நலனுக்கும் தனிப்பட்ட நலனுக்கும் மோதல் ஏற்படுகின்ற சமயத்தில் ஒரு குடிமகன் தனிப்பட்ட நலனைவிடப் பொது நலனையே தேர்ந்தெடுக்க வேண்டும். தன்னுடைய நாட்டிற்கு எது உண்மையான நலனை விளைவிக்கும் என்பதைப்பற்றித் தெளிந்த அறிவு குடிமகனாக இருப்பவனிடம் எதிர்பார்க்கப்படுகிறது. குடியரசு நாடுகளில் மட்டுமே குடியுரிமை என்பதன் கருத்து முழுமையான பொருளைப் பெறுகிறது. இதைப் போலவே ஒரு குடியரசின் வெற்றி அந்நாட்டினுடைய குடிமக்களின் திறமையையும் நன்னடத்தையையும் பொறுத்துள்ளது. ஒரு ஜனநாயக அரசு அமைப்பில் குடிமக்கள் உண்மையான சுதந்தரத்தை அனுபவிக்கிறார்கள். ஏனெனில் குடிமக்களே அரசாளப்படுவது மட்டுமல்லாமல் அதே சமயம் அரசாட்சி செய்பவர்களாகவும்

இருக்கிறார்கள். மேலும் தங்களை ஆள்பவர்களைக் குடிமக்களே தேர்வு செய்கிறார்கள். இதனால் அவர்களே தங்களை ஆண்டு கொள்கிறார்கள். சர்வாதிகார அரசுகளில் குடிமக்கள் தங்களை ஆள்பவர்களின் கைகளில் பகடைக்காய்களாக இருப்பதால் அவர்களால் முழுமையாகவோ அல்லது பகுதியாகவோ கூட உரிமைகளையும் சுதந்திரத்தையும் அனுபவிக்கமுடிவதில்லை.

## அரசியல் அமைப்பில் போற்றிப் பாதுகாக்கப்பட்ட இந்திய குடிமக்களின் உரிமைகள்

இந்திய அரசியலமைப்பில் தன்னுடைய எல்லா குடிமக்களுக்கும் எதை உறுதி செய்து உள்ளது என்பதைக் குறிப்பிடுவதில் முக்கியத்துவம் உண்டு. தன்னுடைய முன்னுரையில் அரசியலமைப்பு பின்வருமாறு கூறுகிறது.

இந்திய மக்களாகிய நாம் இந்தியாவைத் தனி உரிமை ஆட்சி உடைய ஜனநாயகக் குடியரசாக அமைக்கப் பயபக்தியுடன் உறுதி பூண்டிருப்பதாலும் அதனுடைய எல்லாக் குடிமக்களுக்கும் சமுகப் பொருளாதார மற்றும் அரசியல் நீதி, எண்ணத்திலும் சொல்திறத்திலும் நம்பிக்கையிலும், சமய உணர்ச்சியிலும் வழிபாட்டிலும் சுதந்திரத்தையும் வாய்ப்புகளில் நிலையிலும் சமத்துவம் ஆவேம். மேலும் எல்லாவற்றையும் அவர்களிடம் மேன்மையுறச் செய்வதற்கும் நாட்டினுடைய ஒற்றுமையையும் தனிமனிதனுடைய மதிப்பையும் உறுதி செய்கின்ற சகோதரத்துவத்தையும் அளிப்பதாக உறுதியளிக்கிறோம்.

## தேசியக்கோட்பாடும் அனைத்துலககோட்பாடும்

குடிமக்கள் அனைவரும் நல்ல தேசியவாதிகளாக இருக்க வேண்டும் என்பது மிகமுக்கியமானது. அரசியலில் தேசியப் பற்று என்பது மிகவும் கீழான நிலையில் இருந்ததாகச் சென்ற பல காலங்களாகக் கருதப்பட்டு வந்தது. ஆனால், தற்போது அனைத்துலகக் கோட்பாடு என்ற கருத்து மிக முக்கியத்துவம் அடைந்துள்ளது. மேலும் அனைத்துலகக் கோட்பாடு என்பது இலட்சியமாக இருப்பதினால் தேசியக் கோட்பாடு என்பது ஒரு நிலையாகக் கருதப்படுகிறது. தற்போதைய நமது குறிக்கோள் உலக சகோதரத்துவம் உலக அமைப்பு என்பதேயாகும். மாநிலம், மொழி, மதம் போன்ற குறுகிய எல்லைகள் எல்லாம் வரம்பை மீறிவிட்டன. ஒவ்வொருவரும் உலக அரசின் அங்கமாக மாறுகிறார்கள். இஃது ஒரு தெய்வீக எண்ணமாகவே அல்லது நடக்கமுடியாத ஒரு

கனவாகவோ உள்ளது என்று பெரும்பாலோர்க்குத் தோன்றக் கூடும். இது தேசியக் கோட்பாட்டின் விரிவாகும் என்பதை அறிவது வெகுதொலைவில் இல்லை. எவ்வாறு நமது கூடிவாழும் வாழ்வு குடும்பத்திலிருந்து ஒரு குழுவுக்கோ மேலும் குழுவிலிருந்து நாட்டிற்கோ விஸ்தரிக்கப்படுகிறதோ அவ்வாறே தேசியத்திலிருந்து உலக அரசிற்குச் செல்வது முற்றிலும் சாத்தியமானது. மிக உயர்ந்த மனிதர்களான அமெரிக்க ஜனாதிபதி வில்சனாலும் மற்றும் பல ஐரோப்பிய அரசியல் மெய்ஞ்ஞானிகளாலும் முதல் உலக மகா யுத்தத்திற்கு பிறகு பெருமுயற்சியோடு உலக நாடுகளின் சபை ஏற்படுத்தப்பட்டது. அனைத்து நாடுகளின் சட்டங்களை உட் கொண்ட அமைப்பினால் எல்லா நாடுகளையும் ஒருங்கிணைத்து ஒரு நாடு மற்ற நாட்டின் சட்டம் அமைப்பு முதலியவைகளை மதிக்கும் தன்மையை ஏற்படுத்துவதே இதனுடைய முக்கியமான நோக் கமாக இருந்தது. இச்சபையை உண்டாக்கியவர்கள் கற்பனை செய்திருந்தபடி இதன் நோக்கத்தை நாம் மேற்கோளாகக் காட்டலாம்.

முதலாவது, அனைத்து நாடுகளுக்கிடையே ஏற்பட்ட பூசல் களைச் சாத்வீக முறையில் தீர்வு காணுதலும் அமைதியை நிலை நாட்டுதலும் ஆகும். இரண்டாவது, போர்களுக்கான காரணங்களைக் களைதல் ஆகும். மூன்றாவது எங்கெல்லாம் அனைத்துலகப் பொது நன்மைகள் செயல்பட வேண்டுமோ அங்கெல்லாம் மனிதசெயல் களின் எல்லா மட்டங்களிலும் அனைத்துலகக் கூட்டுறவை உருவாக் குதலாகும். ஆனால் துரதிருஷ்டவசமாகச் செயல் முறையில் அனைத்துலகசபை ஒரு தோல்வியாக மாறியது. மேலும் அனைத் துலக விவகாரங்களில் ஒன்றிற்குக்கூட அமைதியான முறையிலே தீர்வுகாண அதனால் முடியவில்லை. அதனால் சமாதானத்தையும் கூட்டுப்பாதுகாப்பையும் உணர முடிந்ததில்லை. அரசியல் வட்டாரங்களில் இச்சபையினால் எந்த வெற்றியையும் அடைய முடியாதிருந்த போதிலும் அரசியலுக்கு அப்பாற்பட்ட வட்டாரங் களில் மிகப் பெரிய வெற்றியைக் கண்டுள்ளது. உலக அரசு என்ற கருத்து நடைமுறைக்கு ஒவ்வாதது அன்று என்பதை நாம் உணரச் செய்வதில் வெற்றி கண்டுள்ளது.

இரண்டாவது உலக யுத்தத்திற்குப் பின் நான்கு ஆண்டுகள் முதிர்ந்த ஆராய்வுக்குப் பிறகு 1954 ஆம் ஆண்டு ஐக்கிய நாடு களின் சபை இந்தியாவையும் ஒரு நாடாக உள்ளடக்கி ஐம்பத் தொரு நாடுகளுடன் அமைக்கப்பட்டது. இதனுடைய குறிக் கோளும் உலக சபையின் குறிக்கோளை ஒத்ததே. முன்னுரையில்

கீழ்க்கண்டவாறு ஐக்கிய நாட்டு சபையின் அடிப்படை நோக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

வருங்காலத் தலைமுறைகளைப் போரின் கொடுமைகளிலிருந்து காப்பாற்றுதல். மனித அடிப்படை உரிமைகளில் ஆழ்ந்த நம்பிக்கையை உறுதிசெய்தல்.

அனைத்துலகங்களின் சட்டப் பிணைப்பாற்றலை மதிக்கவும், தகுந்த நீதியை ஏற்படுத்தவும் செய்தல்.

நல்ல வாழ்க்கைத் தரத்தையும் சமுதாய முன்னேற்றத்தையும் உயர்த்துதல்.

அனைத்துலக சபைகளைவிட நன்கு முன்னேறியிருந்த போதிலும் அரசியல் உலகத்தில் இது ஒரு தோல்வியாகவே கருதப்பட்டது. இவ்விரு உலக அமைப்புக்களும் தோல்வியாக இருந்தபோதிலும் உலக அரசு என்ற கருத்து உத்வேகம் பெற்றுள்ளது. மேலும் வரும் நூற்றாண்டுகளில் ஒரு சில பகுதிகளிலாவது இஃது ஒரு உண்மையாகலாம். மதம், மொழி, அரசு, மாநிலம் போன்ற குறுகிய எல்லைக்கோடுகளின்றி ஒரே உலக அரசுக்கு இவ்வுலகில் வாழும் அனைவரும் கட்டப்பாடு செலுத்தும் நிலை ஒரு கற்பனை அன்று என்று இது உணரச் செய்கிறது.

## அடிப்படையான மனித மதிப்பு

இந்த சந்தர்ப்பத்தில் மனிதர்களால் போற்றிப் பாதுகாக்கப்பட்ட அடிப்படை மதிப்புகள் எவை என்று தெரிந்துகொள்வது தகுதிவாய்ந்தது. நாம் பொதுவாக உண்மைக்கும் மதிப்புக்கும் இடையில் வேறுபாடு உண்டாக்குகிறோம். "இஃது ஒரு அழகிய ரோஜா மலர்" என்பது மதிப்பு அடிப்படையிலான தீர்ப்பு, அதே நேரத்தில் "ஒரு சிவப்பு ரோஜா" என்பது உண்மை அடிப்படையிலான தீர்ப்பு. இரண்டாவதாக உள்ளது வெறும் உண்மையை உரைக்கிறது அல்லது அனுபவ உண்மையை விவரிக்கிறது. மேலும், இஃது உண்மையாகவோ உண்மைக்குப் புறம்பாகவோ இருக்கலாம். ஆனால், மதிப்பு அடிப்படையிலுள்ள தீர்ப்பு ஒரு பொருளின் மதிப்பையோ அல்லது தகுதியையோ அல்லது அனுபவத்தின் தகுதியையோ தீர்மானிக்கிறது. இந்த இருவிதமான தீர்ப்புகளுக்கும் அடிப்படை வேறுபாடு

இருக்கிறது. மேலும் ஒன்றை மற்றொன்றாகக் குறைத்தல் இயலாது. நேர் அறிவியல்கள் உண்மைப் பொருள்களை மட்டுமே பற்றிக் கூறு கின்றன. இவ்வுலகத்தில் அவைகளையே எடுத்தியம்புகிறது. இரும்பு மிக உறுதியான உலோகம் என்பது வெறும் உண்மையைக் கூறி அத்துடன் நின்றுவிடுகிறது. வானவில் அழகிய நிறங்களை உடையது என்ற கருத்து ஒரு உண்மை உரை. இது உண்மை நிலையையும் தாண்டிச் செல்கிறது. தர்க்கம், நல்லியல்புகள் நுண்கலைகள் அரசியலறிவு ஆகிய அறிவியல்கள் வரையறுக்கப்பட்ட அறிவியல் கூறுகள். ஏனெனில் அவை ஒவ்வொன்றிற்கும் மேல்வரி எடுத்துக் காட்டுகள் அல்லது திட்டங்களை வரையறை செய்கின்றன. இவ்வாறு தர்க்கசாஸ்திரத்தில், சிந்தனையில் உறுதியான நிகழ்ச்சிகள் செல்லு படியாகும் நிலையைப் பொறுத்து நாம் பல திட்டங்களை வரையறுக் கிறோம். ஆனால், அவை அவ்வரைமுறைகளையும் மீறுவதால் தவறாகவோ போலியான வாதமாகவோ மாறிவிடுகிறது. இவ் வாறாகவே நல்லொழுக்க இயல்புகள் சில குறிப்பிட்ட படிவங் களையோ அல்லது நடத்தைக்கு கட்டளைச் சட்டங்களையோ வைத்து நல்லது என்றும் கெட்டது என்றும் ஆளுகை செய்கிறது. இவ்வாறு மேல்வரி எடுத்துக்காட்டு என்பது சரியாக ஏற்றுக் கொள்ளப்பட்ட படிவங்களாகும்.

மதிப்புகளின் பல்வேறு வகைகள் யாவை? இந்தக் கேள்வி விரிவாக விவாதிப்பதற்கும் நமக்கு அவசியம் இல்லை. மனிதனால் வெகுகாலமாகப் போற்றிப் பாதுகாக்கப்பட்டு வருகின்ற சில அடிப்படையான மதிப்புக்களை மட்டும் நாம் சுட்டிக்காட்டலாம் உள்ளிருந்து இயங்குகின்றதும் புறம்பே இயங்குகின்றதும் ஆன முக்கியமான இரு பிரிவுகளாக மதிப்புக்கள் பிரிக்கப்படுகின்றன. ஒவ்வொரு பொருளும் ஒவ்வொரு நிகழ்ச்சியும் நம்முடைய பூதவுடலும் ஒரு மதிப்பினை பெற்றுள்ளன. ஏனெனில் ஒவ் வொன்றும் இப்புறவுலகின் பிரிக்கமுடியாத ஒரு பகுதியாக உள்ளது. எப்போது மதிப்புக்களுக்காகவே அன்றி ஒரு முடிவினை அடையத் தக்க வழிகளாகப் பின்பற்றப் படுகிறதோ அப்பொழுது அது புறம்பே இருந்து இயங்குகின்ற மதிப்பு என்று கூறப்படுகிறது. இவ்வாறு பொருள்களும், பணமும் மதிப்புகள் ஆவதில்லை. ஏனெனில் அவை ஒரு முடிவிற்கு வழிகளாகின்றனவே தவிர அவை முடிவு களாகவே இருப்பதில்லை. இவ்வாறு பணத்தைப் பணத்திற்காகவே நாம் மதிப்பதில்லை. ஆனால் அஃது எந்த வாழ்க்கையும் வசதிகள் இல்லாவிட்டால் நம் வாழ்வு முடிவடைகிறதோ, அவ்வசதிகளைப் பெறுவதற்கு நமக்குத் துணையாக இருப்பதற்காகவும் மதிக்கிறோம், உள்ளிருந்து இயக்கக்கூடிய மதிப்புகள் அவற்றின் மதிப்பிற்காகவே

மதிக்கப்படுகின்றன. மேலும், அவை மற்ற மதிப்புகளுக்கு ஒரு கருவியாக அமைவதில்லை, அழகு உண்மை, நன்மை ஆகியவை அவற்றிற்காகவே மதிக்கப்படுகின்றனவே அன்றி, வேறு எதற்காகவும் மதிக்கப்படுவதில்லை. இவை உண்மையின் அறிவு பூர்வமான மதிப்புகள் நன்மையின் நல்இயல்புக்கான மதிப்புகள், அழகின் நுன்கலைகளுக்கான மதிப்புகளும் ஆகும். சிந்தனையின் முடிவான சீர்மை என்பது உண்மையாகும். நல்லொழுக்கம் நன்னடத்தை என்பது மனிதனுடைய நடத்தையின் சீர்மையைக் குறிக்கின்ற நேரத்தில் அழகு என்பது உணர்ச்சிபூர்வமாகவோ அல்லது மனக்கிளர்ச்சியை தூண்டக்கூடிய மதிப்புடையதாகவோ இருக்கிறது. அழகு என்பது மனிதனுடைய அழகு உணர்ச்சியின் சீர்மையாகிறது. இந்த உள்ளிருந்து இயக்கக்கூடிய மதிப்பு என்பது அறிவியல் ஆய்வு ஆராய்ச்சிக்கு அப்பாற்பட்டது. அவை தனித்தன்மையுடையவை. அவை நம்முடைய ஆசைகட்கோ அல்லது உள் உணர்வுக்கு உரிய தூண்டுதலுக்கோ சார்பு உடையதன்று. நமது செயல்களின் திருப்திக்கும் சார்பு உடையதன்று. இந்தியர்க்குரிய சிந்தனை மதிப்புகளை வலியுறுத்துவதுடன் அவற்றிக்கு முக்கியமான அங்கத்தையும் கொடுத்துள்ளது. மனிதனுடைய செயல், எண்ணம் போன்ற எல்லைகளிலிருந்து பிரிக்கமுடியாத மதிப்பு ஆகும். இம் மதிப்புகள் வெறும் மனஞ்சார்ந்தவை அல்ல, மனத்தால் இயக்கப்படுகின்றவை அல்ல. அவை புலனால் அறிய கூடியவையும் ஆகும். இந்தியதத்துவயியலில் இறுதி மதிப்பு என்பது முக்தி அல்லது விடுதலையடைதலைக் குறிக்கும். இது தனி மனிதனுக்கு எதற்குமேல் இப் பிரபஞ்சத்தில் ஒன்றுமில்லையோ. அத்தகைய கனித்த மெய்ம்மையாக இருக்கின்ற மெய்ஞானத்தை பிரம்மத்தில் இரண்டறக் கலத்தலையே இது முடிவாகக் குறிப்பிடுகிறது. கொண்டுள்ளது. அர்த காமா (மனித ஆசைகளும் உலகியல் இன்பங்கள் அல்லது பொருட் செல்வங்களைக் கொண்டிருத்தல்) ஆகியவை நல்வாழ்க்கையை நடத்துவதற்குக் காரணமாகவும் பரப்பிரம்மத்தை உணரச்செய்வதற்கும் காரணமதிப்புகளாக உள்ளன. சமய சாஸ்திர நூல்களில் வலியுறுத்தப்படும் சட்டங்களை பின்பற்றுதலும் எது நல்லொழுக்க நல் இயல்பாக அழைக்கப்படுவதுமாகிய தர்மம், இறுதியான மதிப்பாகிய விடுதலை அடைவதற்கு-முக்தி அடைதலுக்கு மிகவும் இன்றியமையாததாகிறது. இவ்வாறாக இஃது ஒரு காரணமதிப்பாகிறது. இவ்வாறு இந்துமத சிந்தனையில் தர்மம் (அறம்) அர்த்தம் (பொருள்) காமா (இன்பம்) மோஷம் (வீடு) என்ற நான்கு மதிப்புகளை நாம் கொண்டுள்ளோம்.

## குடிமக்களின் உரிமைகள் யாவை?

நாம் இப்போது குடி மக்களின் கடமைகளையும் உரிமைகளையும் பற்றி ஆராய வேண்டி யுள்ளது. குடிமகன் எவற்றை செய்யவேண்டு மென்பதையும் அவன் நாட்டிடமிருந்து என்ன எதிர்பார்க்கிறான் என்பதையும் காணவேண்டும். நாம் அடிப்படை உரிமைகளையும் கடமைகளையும் மட்டுமே குறிப்பிடவேண்டும். உரிமைகளும் கடமைகளும் ஒன்றோடு ஒன்று நெருங்கிய தொடர்பு கொண்டுள்ள சொற்கள். ஒன்றில்லாமல் மற்றது இருக்கமுடியாது. கடமை என்பது சமுதாயத்தில் மற்ற அங்கத்தினருடன் தொடர்புகொண்டுள்ள ஒருவன் மேல் சுமத்தப்பட்டிருக்கும் கட்டுப்பாட்டையே குறிக்கிறது. நேர்மாறாகச் சமுதாயத்திற்குத் தன் கடமையை நிறைவேற்றுவதில் சில வசதிகளையும் அனுபவிக்கிறான். எனவே, ஒருவன் தன் கடமைகளை மட்டுமோ அல்லது உரிமைகளை மட்டுமோ வலியுறுத்த முடியாது. இந்தியாவில் தர்மத்திற்கு அல்லது மத சம்பந்தப் பட்டதும் நல்லொழுக்க சம்மந்தப்பட்டதுமான வேலைகளுக்குத் தனி முக்கியத்துவம் தரப்படுகிறது. இம்முறையிலேயே செய்யப்படுகின்ற ஒருவனுடைய கடமையால் அவனுடைய உரிமைகள் வளர்க்கப்படுகின்றன.

ஒருவனது தனிவளர்ச்சிக்கு உரிமைகள் மிகவும் முக்கியமான தகுதியாக உள்ளன. அதேபோலச் சமுதாய நல்வாழ்விற்கும் அவை அவசியமாகின்றன. மனிதனின் நல்வாழ்வை உறுதி செய்யும் வழிமுறைகளாக உரிமைகள் அமைவதால், சமுதாயம் தனிமனித உரிமைகளை மதிக்க வேண்டும். பொதுவாகச் சில உரிமைகள் அடிப்படை உரிமைகளாகக் கருதப்படுகின்றன. சில நாடுகள் அவற்றை அரசியலமைப்புச் சட்டத்தில் புகுத்தியுள்ளன. நாம் முன்பு கண்டதுபோல, இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் முன்னுரையில் இவை இணைத்து ஒன்றுபடுத்தப் படுகின்றன. இதைப் போலவே பல நாடுகளிலும் உள்ளன.

மனிதனின் சுதந்தரமே இவ்வெல்லா உரிமைகளுக்கும் அடிப்படையாகிறது. அஃது நமது உயிருக்குப் பாதுகாப்பைத் தருவதுடன் வெளிப்புற வற்புறுத்தல்களினின்று விடுதலையையும், பாதுகாப்பையும் பெற்றுத்தருகிறது. சட்டபூர்வமாகச் சரியெனக்காட்டப்பட்டாலன்றி எவரையும் கைது செய்யவோ அல்லது சிறையிடவோ முடியாது தற்காப்பிற்காகப் பயன்படுத்துவதும் தேவையானதும் பொருத்தமானதுமான சக்தியின் பிரயோகத்தை நேர்மையென

விளக்கவல்ல தற்காப்பு உரிமையைச் சுட்டுவதே தனிமனித சுதந்திரமும் பாதுகாப்பான உரிமை. சுதந்தரமான கட்டுப்பாடு அற்ற வாழ்வு, வேலை செய்வதற்கான உரிமையைத் தன்னுள் கொண்டுள்ளது. தொழில் செய்வதற்கான உரிமை நாட்டின் பொருளாதார நிலையைச் சார்ந்துள்ளது. அப்பொருளாதார நிலை எல்லோருக்கும் பொதுவாகிய தொழில் செய்யும் உரிமை போன்றவற்றிக்கு உகந்ததாக இராது. இந்தியா உட்பட எல்லா நாடுகளிலும், ஆண்களும் பெண்களும் கணிசமான அளவில் வேலையில்லாமல் இருக்கிறார்கள். போதுமான கூலிபெறுகின்ற உரிமை தொழில் செய்யக்கூடிய உரிமையைப்பின்பற்றியுள்ளது.

குடிமக்களால் குடும்ப வாழ்வுக்கான உரிமை, சொத்துரிமை மதசுதந்தரம் பேச்சுரிமை, பத்திரிகை சுதந்திரம், எல்லோரும் கல்வி கற்க உரிமை, சட்ட அடிப்படையிலமைந்த உரிமை பெறுதல், போன்ற மற்ற உரிமைகளையும் அனுபவிக்க முடிகிறது. ஆனால் இவை பெரும்பாலும் சமுதாய, அரசின் தன்மையைப் பொறுத்துள்ளன. இவைகளில் எந்த உரிமையும் தன்னிச்சையாகசெயல்பட முடியாது. செயல் ஆளமுடியாது. அவற்றை விரும்பத்தகாத முறையில் பயன்படுத்துவதற்கு எதிராகத் தடை செய்யத் தடைகளும் உள்ளன. சமுதாய நீதியினாலும், பொது நலத்தினாலும் சொத்துரிமை வரையறுக்கப்பட்டிருப்பதுடன், கட்டுப்படுத்தவும் பட்டிருக்கிறது. பேச்சுரிமை, எழுத்துரிமை, பத்திரிகை சுதந்தரம் ஆகியவை இராஜதுவேஷம், அவதூறு, தெய்வசிந்தனை ஆகியவைகளுக்கு எதிரான சட்டங்களுக்குட்படுத்தப்பட்டுள்ளன.

## குடிமக்களது கடமைகள்

1. அரசியலமைப்புக்குக் கீழ்ப்படிதலும், அதன் சீர்மிகு கொள்கைகளையும் நிலையான ஒழுங்கமைப்பினையும் மதித்து நடத்தலும்—தேசியக் கொடி, தேசீய கீதம்.

2. எது நமது தேசிய விடுதலை இயக்கப் போராட்டத்தைத் தூண்டிவிட்டதோ அத்தகைய உன்னதக் கொள்கைகளைப் பின்பற்றுதலும், செழுமையடையச் செய்தலும்.

3. இந்தியாவின் ஒருமைப்பாட்டையும் ஒற்றுமை உணர்வையும் முதலான தனி உரிமை ஆட்சியைப் பாதுகாத்தலும் அதனை நிலை நிறுத்தலும்.

4. நாட்டினைக் காத்தலும், தேவைப்படும்போது அழைக்கப்பட்டால் தேசிய சேவை செய்தலும்.

5. மதம், மொழி, இன, இட வேறுபாடுகளைப் புறக்கணித்து எல்லா மக்களிடமும் ஒருமித்த கருத்தையும் பொது சகோதரத்துவ உணர்வையும் ஏற்படுத்துதல்—உயர்த்துதல்-பெண்களின் மதிப்பிற்கு இழுக்கு ஏற்படும்படியான செயல்களைக் கைவிடுதல்.

6. நமது கூட்டுக்கலாச்சாரத்தின் சிறந்த தெளிந்த பாரம்பரியத்தைப் போற்றிக் காத்து மதித்தல்.

7. காடுகள், மலைகள், நதிகள், ஏரிகள், வன விலங்குகள் ஆகியவையடங்கிய இயற்கைச் சூழலை முன்னேற்றுவதும், பாதுகாத்தலும்—மேலும் வாழும் உயிரினங்களிடம் அன்பு செலுத்தல்.

8. அறிவியல் மனநிலை, மனிதாபிமானம், கேள்வி ஞானம் ஆய்ந்தறியும் பண்பு, சீர்திருத்த நோக்கம் ஆகியவைகளை வளர்த்தல்.

9. பொதுச் சொத்துக்களைப் பாதுகாத்தலும் வன்முறையை விட்டொழித்தலும்.

10. தனிப்பட்ட கூட்டான செயல்களின் எல்லா மட்டங்களிலும் மேன்மையை நோக்கி அடையப் பாடுபடுதல். அதனால் நாடு விடாமுயற்சியிலும், சாதனைகளிலும் ஓர் உயர்ந்த மட்டத்திற்கு இடைவிடாது உயர்வடைகிறது.

இனி, நாம் குடிமகனின் சாதாரணக் கடமைகள் பற்றி விவாதிக்கலாம். சட்டத்தை மதிப்பதே ஒரு குடிமகனின் முதன்மையானதும் முக்கியமானதுமான கடமை யாகும். இது குடியுரிமையின் அடிப்படையாகிறது. ஏனெனில், குடிமக்கள் அந் நாட்டின் சட்ட திட்டங்களையும் ஒழுங்குமுறைகளையும் மதிக்காவிட்டால், அச்சமுதாயத்தில் அமைதியே இருக்காது. ஒரு முழுமையான குடியரசு நாட்டில் சட்டம் மக்களின் விருப்பத்தையே பிரதிபலிக்கிறது. எனவே, சட்டத்திற்குக் கீழ்படியாமை என்பது நமது சுதந்தரம் எந்த வழியிலும் தடை செய்யப்படுகிறது என்ற பொருள் தராது ஆனால் சட்டம் எந்தக் குறிப்பிட்ட வட்டாரத்தில் நல்லொழுக்கப்படி சமுதாயத்திற்கு முரண்பாடாக இருக்கிறதோ, சமுதாயத்தில் ஊறு விளைவிப்பதாக இருக்கிறதோ, சாதாரண சட்டமுறைப்படி அதனை மாற்றுவதற்கோ அல்லது இடப் பெயர்ச்சி செய்வதற்கே அரசாங்கம் இணங்கச் செய்யமுடியாதிருக்கிறதோ, அதற்கு எதிராகக் கருத்துக்களைத் திரட்டுவது, அதை எதிர்ப்பது ஆகியவை

குடிமகனது கடமையாகும். இது விதி விலக்கான நிகழ்ச்சிகளுக்கு மட்டுமே உள்ளது. குடிமக்களுக்கு வெளிநாட்டு ஆதிபத்திய சக்திகள் நாட்டினை மிரட்டுகின்றபோது அதனிடமிருந்து நாட்டைக் காக்க இராணுவ சேவை செய்தல் மற்ருெரு கடமையாகிறது. வாக்குப் பதிவு செய்தல் என்பது பல நாடுகளில் சட்டபூர்வமான கடமையாகக் கருதப்படவில்லை. ஆனுல் தேர்தல் சமயத்தில் தன் மனச்சான்றின் அடிப்படையில் ஒவ்வொரு குடிமகனும் வாக்களிக்கக் கடமைப் பட்டிருக்கிருன்.

## சமுகசேவைகள்

நற்குடியுரிமை என்பது இக்கடமைகளையும் உரிமைகளையும் விட மேலானது. ஒரு நல்ல குடிமகன் பொது நல முக்கியத் துவத்தைப்பற்றிய எல்லா விஷயங்களையும் நன்கு அறிந்தி ருக்க வேண்டும். அவைகளைப் பற்றிய தெளிந்த நடுநிலைமையான தீர்ப்பினை அடையும் வல்லமை பெற்றவனுகவும் இருக்கவேண்டும். அவன் தன் நலத்தைவிடப் பொது நலத்தையே மேலாக மதிக்க வேண்டும். சமுதாயத்தின் நலனுக்காக முழுமனதுடன்விருப்பத் துடன் கடினமாக உழைக்கவேண்டும். சமூக சேவை மனப்பாங்கு ஊற்றெடுக்கப்பெற்றவனுக இருக்கவேண்டும். சமுக சேவைக்கு மிக முக்கியமானதும் மிகச் சிறப்பாகச் குறிப்பிடத் தக்கதும் எவை எனத் தெரிந்திருக்கவேண்டும். நாட்டில் எவ்வளவு நல்ல நிர்வாகம் சமுதாயத்தின் குறிப்பிட்டபகுதிகளில் இருந்தபோதிலும், அதனுல் திருப்திகரமாக சமுதாயத்திலுள்ள தற்காலிகமாகவோ அல்லது நெடுங்காலமாகவோ வழங்கி வருகின்ற பிரச்சாரங் களுக்குத் தீர்வு காண முடியாது என்பதை, எடுத்த எடுப்பிலேயே நாம் குறிப்பிடவேண்டும். சில வகுப்பினர் கல்வித்தரத்திலோ அல்லது பொருளாதார வட்டத்திலோ மிகப் பெரிய முன்னேற்றம் அல்லது வளர்ச்சி பெற்றிருக்கமுடியாது என்பது முற்றிலும் சாத்திய மானது. அவர்களையும் சமுதாயத்தின் மற்றப் பகுதியிலுள்ளவர் களுடன் சமமுறையில் போட்டியிடும் அளவுக்கு முன்னேறச் செய்வதும் அவசியமாகிறது. ஒரு நாட்டின் அரசினுல் மேற் கொள்ளக்கூடியதாக இல்லாத ஒரு பெரும் பணி அதற்குத் தேவையாகலாம். தனி மனிதர்கள் ஒன்று கூடி அவர்களுக்குள்ளே ஒரு சங்கத்தை அமைத்து இதற்கான தனிமுயற்சிகளை மேற் கொள்ளவேண்டும். அப்போதுதான் இத்தகைய சமூகத்தினர் வகுப்பினர்கள் நன்னிலையைஅடையமுடியும். சமுதாய, சுற்றுப்புறத் தூய்மை-சுகாதாரம் மேலும் கல்வி ஆகியவைகளை இச்சமூகத் தினருக்கு—வகுப்பினருக்கு இத்த்கைய சங்கங்களின் மூலமே புகட்ட

முடியும். சமுதாயத்தின் மிகத் தேவையான பொருள்களை உற்பத்தி செய்வதற்கான வசதிகளையும் வாய்ப்புகளையும் அளிப்பதன்மூலம். இவ்வகுப்பினரது வாழ்க்கை நிலையினை உயர்த்தலாம். குடிசைத் தொழில்களை உண்டாக்கி, அத்தொழில்களைப் பின்பற்றுமாறு அவர்கள் ஊக்குவிக்கப்படலாம். இத்தகைய பின்தங்கிய வகுப்பினர்கள், தங்களுடைய வறுமைச்சுமையிலிருந்தும், தவறுகளி லிருந்தும், வீணான சமூகப் பழக்கங்களிலிருந்தும் போதுமான அளவில் விடுவிக்கப்படுவதற்கு எல்லாக் காரியங்களையும் செய்வது அவசியமாகிறது. அவ்வகுப்பினரது பின்தங்கிய நிலைக்குப் பல காரணங்கள் இருக்கின்றன. பொருத்தமான, சரியான கல்வி கற்றலிலிருந்து பின்வாங்கியதும் அவர்களுடைய பின்தங்கிய நிலைக்குக் காரணமாகலாம். இதைத் தவிரவும் வேறு காரணங்களும் துன்பங்களும் கூட இருக்கலாம். மிகவும் சுலபமாக அணுக முடி யாத பல கிராமங்களில் குடிப்பதற்கு நல்ல நீர் காணப்படவில்லை என்பது மிகவும் முக்கியமான பிரச்சினையாகிறது. இப்பிரச்சனை களுக்குத் தீர்வு செய்வதில் ஓர் உண்மையான சமுதாய நன்னோக்கம் அவசியமாகிறது. பயங்கரமான இயற்கையின் தட்பவெப்ப நிலையால் ஏற்படும் பூகம்பம், வெள்ளம், விஷத்தன்மையுடைய கொடிய கிருமிகளால் ஏற்படும் நோய் போன்றவற்றால் அழிவுகள் ஏற்படும் சமயங்களில் அரசு நம்மை மீட்பதற்கு வரவேண்டும் என எதிர்பார்ப்பது நடக்க முடியாத தொன்றாகும். அதிகபட்சமாக, அரசு இம்மீட்புப் பணி-நிவாரணப்பணியில் ஈடுபட்டிருக்கும் அமைப்பாளர்களிடம் சிறு தொகையைக் கொடுத்துப் பயன்படுத்து மாறு மட்டுமே செய்ய முடியும். இத்தகைய அழிவுகள் ஏற்படும் காலங்களில், பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவி செய்வதற்கான செயல்களை மேற்கொள்ள நிவாரண சங்கங்கள் பல உள்ளன இத்தொடர்பாக ஸ்ரீராமகிருஷ்ணமிஷன் இத்தகைய நற்பணிகளைத் தொடர்ந்து செய்துவந்திருக்கிறது, வந்துகொண்டிருக்கிறது. இது ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சருடைய திருப்பெயரையும், சுவாமி விவேகானந்தருடைய திருப்பெயரையும் தாங்கி நிற்கக்கூடிய ஒரு சமய சங்கமாக அமைந்துள்ளது. குறிப்பாக இயற்கையால் ஏற்படும் அழிவுகளின்போது அல்லலுறும் மனித சமுதாயத்திற்காக தன்னலமில்லாச் சேவை செய்யும் மனப்பாங்கினை அடிப்படை யாகக் கொண்டுள்ளது இச்சங்கம். இச்சங்கத்தின் பெரும்பாலான அங்கத்தினர்கள் துறவிகளாகவே இருக்கிறார்கள். அவர்கள் இத்தகைய துயரங்களால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவி செய்யத் தங்களாலான எல்லா முயற்சிகளையும் முழுமனதுடன் செய்கிறார்கள். நம்முடைய வேதங்களில் காணக்கூடிய மிக

முக்கியமான செய்தி இதற்கு ஊக்கமளிக்கிறது; "எல்லோரும் இன்பமாயிருக்கவேண்டும்" (சர்வ ஜனோ சுகினோ பவந்து) கடந்த நூற்றாண்டிலும், இந்நூற்றாண்டின் ஆரம்ப பத்தாண்டுகளில் கிருத்துவ மிஷனரிகளின் சமூக சேவை பாராட்டுதலுக்குரியதாகிறது. கிராமப்புறங்களில் பள்ளிகளைத் திறந்தும் சிறந்த மருத்துவமனைகளைத்திறந்தும் கிராமப்புற மக்களுக்குச் சிறந்த தொண்டு புரிந்தனர். அம்மக்களுக்கு உண்மையான நிவாரணத்தையும் அளித்தன. ஆனால் இந்த மிஷனரிகளைப் பொறுத்த வரையில், இயேசுகிருஸ்து அறிவுறுத்திய நல்வாழ்வுக் கோட்பாடுகளைப் பரப்புதலும், சமூக சேவை செய்வதும் இணைந்தே சென்றன. அனைத்துலக சகோதரத்துவ உணர்வினை அணுகுகின்ற மனப்பாங்கு ஒவ்வொருவரிடமும் இருப்பதைக் காண்பதற்கு இத்தகை சமுக சேவைகள் ஒருவனுக்கு உதவுகிறது. இத்தகைய பணிகள் ஒரே நெருப்பிலிருந்து தோன்றிய பொறிகள் போல, எல்லோரும் அவர்களுள் ஒரே தெய்வாம்சம் கொண்டவர் என்றும், எல்லோரும் ஒரே தெய்வீகத்தைக் கொண்டுள்ளவர்கள் என்ற கொள்கைகளை எடுத்துக்காட்டுவதாக உள்ளன. இத்தகைய தன்மையுடைய பணியில் தீவிரமாக ஈடுபடும்போது, அந்த நேரத்திலாவது மனிதன் தன்னுடைய சுயதலத்தை மறந்து, இப்பிரபஞ்சத்தில் கவரப்பட்டுத் தன்னை அதில் ஒன்றாகக் காண்கிறான். இதுவே கர்மயோகத்தில் மிகப்பெரிய சாதனையாகக் கருதப்படுகிறது.

அத்தியாயம் 8

# நற்குடிமக்களை உருவாக்குவதில் சமுதாயத்தின் பங்கு

நாம் இதுவரை கூறிவந்ததிலிருந்து, ஒரு நல்ல குடிமகன் ஒரு நாட்டின் முதுகெலும்பு, அத்தகைய குடிமகன் இல்லாமற் போனால் சமூகத்தில் ஏராளமான விரிசல்கள் உண்டாகும் என்பது தெளிவாகிறது. நாம் இதற்கு முன்பே குடிமகனது கடமைகளும் உரிமைகளும் பற்றி விரிவாக விவாதித்திருக்கிறோம்: விவரித்திருக்கிறோம். மக்களுக்கு எவ்வாறு நற்குடியுரிமை பற்றி போதிக்க வேண்டும் என்பதே, நமது சமுதாயத்தைப் பொறுத்தவரையில் எழக்கூடிய மிக முக்கியமான கேள்வியாகிறது. ஒரு குடிமகன் என்பவன் ஆளுபவர்களின் விருப்பு வெறுப்புகளுக்கெல்லாம் சாதகமாகவும் சார்புடையவனாக இருக்கும் சாத்வீக குணமுடையவன் அல்லன் குடியுரிமை என்பது தீவிரமாகப் படிக்கக்கூடிய ஒரு பிரிவாக உள்ளது. ஒருவன் எவ்வாறு அரசினை நிர்வகிக்கவேண்டும், என்பதையும், அவன் எவ்வாறு நிர்வகிக்கப்படவேண்டும் என்பதையும் ஒருவருக்குப் போதிக்கப்படுவதில், நிர்வாகத்திற்கும், அரசிற்கும் உள்ள சிக்கலான புறத்தோற்றம் மேலும் கடினமாகிறது. நாட்டின் நலனும், அதனுடைய ஒன்றியிருக்கும் திறனும்,அந்நாட்டிலுள்ள மக்களையே சார்ந்திருக்கின்றன. மக்கள் தங்களுக்குத் தகுந்த அரசையே பெறுகிறார்கள் என்பது அடிக்கடி கூறப்படுகின்ற ஒன்றாகும். அரசினுடைய செயல் முறைகளைக் கூர்ந்து அறியும் பொதுமக்கள் எங்குள்ளனரோ, அரசின் நல்லது கெட்டது நாடியிருக்கிறார்களோ உடனடியாக ஏற்படக்கூடிய பலனைப்பற்றிக் கவலைப் படாமல், தைரியமாக மக்கள், நல்லியல்புகளில் உயர்வினை உறுதி செய்கிறார்களோ, அப்போது, சமுதாயம் செழிப்பையும், சந்தோஷத்தையும் நோக்கி பீடு நடைபோடுகிறது என்பது உறுதி. இளைஞர்களுக்கு அளிக்கப்படும் கல்வி முப்படிவத்தையுடையதாக இருத்தல் வேண்டும். தன்னுடைய காலில் தானே நின்று, தன் வாழ்விற்கு வழிசெய்யக்கூடிய வேலை நோக்குடைய கல்வி முதலாவதாகிறது. இரண்டாவதாக அவனுடைய வாழ்க்கையில் நல்லொழுக்க நல்லியல்புகளை அமைத்து அவனுடைய தனித்தன்மையை வளர்க்கும் நல்லொழுக்க கல்வி அல்லது நீதி போதனைக் கல்வி இருத்தல் வேண்டும். குடியுரிமை பற்றிய அறிவைத் தரக்கூடிய கல்வி மூன்றாவதாக அமைதல் வேண்டும். உண்மையான அறிவு வழிப் பிறக்கின்ற கல்வி என்பது முழுமனிதனுக்கும் கல்வியாவதால், உடல்தகுதி, உள்ள விழிப்புணர்வு, நல்லொழுக்கத்தரத்தை உருவாக்கும் தன்மை, ஆன்மீக மதிப்புகள் ஆகியவைகளை

உள்ளடக்கியதாக இருத்தல், வேண்டும். தெளிந்த அறிவுத் திறனும், முழுமனதுடன் கூடிய, சமுதாயக் கட்டுப்பாடுகளைச் செய்யும் தன்மையும் கொண்டிருத்தல் அவசியம். இறுதியாகக் கூறப்பட்டது நாட்டின் ஒருமித்த தன்மையையும், ஒட்டிநிற்கும் தன்மையையும் உண்டாக்குகிறது.

குடியுரிமை என்பது மக்களின் மனநிலையை பண்படுத்துவதே யாகும். கல்வியும் பயிற்சியும் அவசியமானவை. அவை (கோட்பாடுகளை அடிப்படையான) ஏட்டுக் கல்வி, (செயல் முறை பயிற்சி யடங்கிய செய்முறைக் கல்வி என இரு வகைப்படும். முன்னதாகக் கூறப்பட்ட ஏட்டுக் கல்வி என்பது குடிமகனின் கருத்துக்களின் படி அரசியல் கருத்துக்களடங்கியதும் நிர்வாகம் பற்றியதுமான பிரச்சனைகளை விரிவாக விவாதிக்கும் குடியுரிமைக்குரிய படிப்பு கல்வி என்பது குடியுரிமையின் காரண காரியமுறை என்பதல்ல இது வாழ்வின் தீர்கமான உண்மைகளை அடிப்படையாகக் கொண்டது. ஒருவனுக்கு தன் நாட்டின் அரசு எவ்வாறு நடத்தப் படுகிறது என்பதை மட்டும் அறிந்து கொள்வதோடு, அதன் பாராளுமன்றம் சட்டசபை போன்ற பொருத்தமுடையசபைகளுக்கும் சென்று அவைகளின் செயல் முறைகளை காணவும் வாய்ப்புக்கள் அளிக்கப்பட வேண்டும். அன்றாட நிர்வாகத்தினை எவ்வாறு எவ்வகையில் அரசாங்கம் நடத்திச் செல்கிறது என்பதில் மட்டு மல்லாமல், நீதி சட்டம் ஒழுங்கு வருவாய் வசூல் செய்தல் ஒதுக்கீடு செய்யப்பட்ட வரவு செலவுத் திட்டப்படி செலவு செய்தல் போன்ற முக்கியமான அம்சங்களிலும் ஒருவனுக்குப் பரிச்சியம் ஏற்படுத்த வேண்டும். மாணவர்கள் இந்த விசயங்களில் மிகச் சிறந்த வல்லுநர்களாக இருக்க வேண்டும் என்னும் யோசனை இங்குக் கூறப்படவில்லை. அவர்கள் நாட்டின் நிர்வாகத்தைப் பற்றிய மேலோட்டமான அறிவையாவது பெற்றிருக்கவேண்டும். அரசியல் வாதிகளுக்கு இடையில் ஏன்-சட்டமன்ற உறுப்பினர்களி டையே கூட அரசு எந்திரத்தைப்பற்றிய அறிவியல் ஆழமான இடைவெளி காணப்படுகிறது. எனவே, குடியுரிமைக் கல்வி என்பது வகுப்பறைப் போதனையை விட அதிகமானதாக உள்ளது. புத்தக அறிவினைவிடச் செயலறிவு மிகவும் அதிகமாகத் தேவைப்படு கிறது.

சமுதாயம் என்னிடம் என்ன எதிர்பார்க்கிறது? நான் நல்ல குடிமகனாக மாறச்சமுதாயத்திடமிருந்து என்ன எதிர்பார்க்கிறேன் என்ற கேள்விக்குக் கடமைகளும் உரிமைகளும் என்ற அத்தியாயத் தில் விரிவான பதில்கள் அளிக்கப்படுள்ளன.

# ஆய்வுக்குரிய தலைப்புகள்

1. ஒவ்வொரு மாணவனும் தன் வீட்டுச் சூழ்நிலையை விவரித்து அதனைக் கையாளும் முறையினை விளக்கல்.

2. உன்னால் அவை உணரப்படாவிட்டாலும் கீழ்க்கண்ட நிகழ்ச்சிகளை எவ்வாறு புரிந்து கொள்வாய் ? தக்க உண்மைகளையும் நிகழ்ச்சிகளையும் ஒன்றன்பின் ஒன்றாக எடுத்துக்காட்டு.

(i) அருகிலிருக்கும் பகுதியில் மிகுதியான மழை பெய்தது.

(ii) நீங்கள் செல்ல வேண்டிய புகை வண்டியினைத் தவற விட்டீர்கள்.

(iii) அண்டை வீட்டில் ஒரு கொலை நிகழ்ந்தது.

(iv) ஒரு வீடு தீயினால் அழிக்கப்படுகிறது.

(இவற்றில் மிக முக்கியமாகக் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியைக் கொடுக்க முயலுக)

3. வீட்டினுள் விளையாடும் ஒரு குழந்தை கார் வந்து நின்ற ஓசையை கேட்டுத் திடீர் என்று தந்தை வந்துவிட்டார் எனக்கூறுகிறது. இதை எடுத்துகாட்டாகக் கொண்டு மேலும் இது போன்ற ஆறு சம்பவங்களைக் கூறு. இதில் நினைப்பூட்டும் இறுதிச்சொல் என்னவென்று காட்டி அது அந்நிகழ்ச்சியில் அறிவுடன் எவ்வாறு தொடர்பு கொண்டுள்ளது எனக் காட்டு.

4. கவர்ச்சி மிக்க ஒன்றுக்கொன்று சமமான இரு நிகழ்ச்சிகளை ஒன்றினைத் தீர்மானிக்க நீ செய்யும் பல வழிகள் யாவை? சில சான்றுகள் தருக.

5. கீழ்க்கண்டவைகள் விவாதிக்கப்படலாம்.

(i) கூட்டு வாழ்வின் பயன்கள் (ii) தனிக்குடித்தனம் அல்லது கூட்டுக்குடும்பம் (iii) வகுப்புப் பேதமற்ற சமுதாயம் முடியுமா?

(iv) ஒன்றுடன் ஒன்று உரிமைகளும் கடமைகளும் எவ்வாறு பிணைக்கப்பட்டிருக்கின்றன (v) குடிமக்களுக்குக் கடமைகளும் உண்டா?

(vi) இந்து கிருத்துவக் கோவில்களும் மசூதிகளும் தனிப்பட்ட முறையிலோ அல்லது தேசிய அளவிலோ முக்கியமானவையா?